வேண்டியவர்கள் இங்கு எவருமில்லை. எஞ்சி நிற்கும் புரட்சியாளன் நான் ஒருவன் மட்டுமே. ஆனால் எந்த மாதிரி புரட்சியாளன்? மனதிற் குள் புகுந்து பார்த்தால் தபால்தலை சேகரிப்பவன்.

லவன் : இது நீ இப்பொழுது கூறுவது. ஆனால் ஜெனரல் மீது யார் குண்டு வீசினார்கள் ?

தி: அது புராதன சரித்திரம். அந்த குண்டு வெடிக்கக்கூட இல்லை. இப்பொழுது அதைக் கிளறுவதில் எந்தவிதப் பயனுமில்லை.

லவன் : நிஜத்தில் என் செவிகளை என்னால் நம்ப முடியவில்லை. பத்து வருடங்களாக வாக்குமூலம் கொடுக்க மறுத்துவந்தாய். அசைந்து கொடுக் காமல் சிறப்பாக நின்றாய். திரும்பத் திரும்ப ஆணையிட்டும் நீ நிலை குலைந்தாய் இல்லை. பதிலுக்கு, நீ வெறுப்புடன் எழுந்திருந்து (நாற்காலியிலிருந்து எழுந்து நின்று) குழந்தை ராஜாவின் மாமா தேசாதி பதியின் படங்கள் மீது காறி உமிழ்ந்தாய் (அமர்கிறான்). நாம் இருவரும் இங்கு சேர்ந்து வாழ்ந்து வந்தோம். எல்லாம் இனிமையாக முடிந்து விட்டது. இப்பொழுது திடீரென்று எல்லாவற்றையும் வியர்த்தமாக்க விரும்புகிறாய்.

தி: இதில் ஏதும் சாரமில்லை. கருத்து ரீதியாகப் பிரிந்து நான் எங்கேயோ போயிருந்தேன். ஆனால் மற்றவர்கள் இவ்வளவு நாட்களாக, இந்த அழகிய, அமைதியான, வளமான நாட்டின் அத்துணை பிரஜை களும் குழந்தைராஜா, மாமா தேசாதிபதியின் (எழுந்து விறைப்பு நிலை யில் நிற்கிறான்) கீர்த்தியைப் பாடிக் கொண்டிருக்கின்றனர். எல்லா சிறைக் கூடங்களும் காலியாகிக் கிடக்கின்றன. நான் மட்டும்...நான் மட்டும்... இவற்றை எண்ணிப்பார்க்க... இல்லை கர்னல்...நான் சத்திய மாகச் சொல்கிறேன். என்னுடைய முந்தைய நம்பிக்கைகளை விட்டொ ழித்து விட்டேன். எல்லா ஜனங்களும் அரசாங்கத்தை ஆதரித்து நான் எதிர்த்து நின்றால் இதில் ஏதோ இருக்க வேண்டும். சொல்லப் போனால் மிக நல்ல அரசாங்கம் கிடைத்துள்ளது... அவ்வளவுதான்.

லவன் : ஹம்் ... ஹாம்

தி: நான் மன்னிப்பு கேட்கட்டுமா?

லவன் : (எழுந்திருக்கிறான். கட்டளை மிகுந்த குரலில்) திருத்துகிற சிறைவாசத்தால் திருந்திவிடும் மனம் என அதை சாட்சியாக நோக்கும் நான், மகிழ்ச்சியோடு நிறைவோடு ஒரு கைதியின் பாவவிமோசனத்தை ஏத்துக் கொள்ளும் நான் இந்தப் புதிய, புத்திபூர்வமான சுகமான கருத் துக்கள் வேர் ஊன்றி நிற்குமா, நீடித்திருக்குமா—இதையும் கவனித்தாக வேண்டும் (உட்கார்கிறார், மாறுபட்ட குரலில்) இவை இப்படியிருக்க,

நம் அரசாங்கம் சிறப்பாக உள்ளது என்று ஏன் நீ கருதுகிறாய் என்பதை நான் அறியலாமா?

கைதி : உங்களுக்குக் கண்கள் இருக்கின்றன கர்னல். சரித்திரத்தில் எந்தக் காலத்திலும் நம்நாடு இந்த அளவுக்கு முன்னேற்றமடைய வில்லை. சில நேரங்களில், என்னுடைய சிறை அறையில் நான் கட்டைப் பலகைப் படுக்கையை தள்ளிப்போட்டு, அதன் மேல் கழிப்பிட வாளியை கவிழ்த்து நிறுத்தி அதன் மீது குதி கால்களைத் தூக்கி நிறுத்தி நின்று ஜன்னல் வழியே தெரியும் அழகான பசும்புல் நிலத்தைப் பார்த்து நிற்பேன். அது ஒவ்வொரு வசந்தத்திலும் பலவித மலர்களைத் தன்னிடத்தே சிதற வைக்கும். அறுவடை காலத்தில், போரடிக்கும் நேரத்தில் பண்ணைத் தொழிலாளர்கள் பசும் புல் நிலத்திற்கு வந்து புற்களை வெட்டுவார்கள். கடந்த பத்து வருடங்களாக கவனித்துக் கொண்டிருக்கிறேன். மகிழ்ச்சியாலும் திருப்தியாலும் அவர்கள் முகம் ஒளியை உமிழ்ந்து கொண்டிருக்கிறது. அந்த ஒளி வருடா வருடம் அதிகரித்துக் கொண்டுதான் வருகிறது.

தலைவன் : ஜன்னலின் வெளியே எட்டிப் பார்ப்பது சிறைச்சாலை விதிகளுக்கு எதிரானது என்பதை நீ உணரவில்லையா?

கைதி : ஆனால் இது கருத்துவாத நோக்கங்களுக்காக, கர்னல், திருத்தும் கல்விமுறைக்காக. அதுமட்டுமல்ல. பசும்புல்லின் அந்தப்புறம் ஒரு சிறிய குன்று. குன்றின் மறுபுறம் தொழில் நோக்கங்களுக்காக ஏழு வருடங்களாக கட்டப் பெற்றுவரும் கட்டிடம். என்னால் அந்தப் புகைக் கூண்டைக் கூடப்பார்க்க முடியும். சில சமத்தில் அதிலிருந்து புகைகூட வரும்.

தலைவன் : மிகச் சரியாகச் சொல்ல வேண்டுமானால் அது பிணங்களை எரிக்கும் அறை என்று சொல்வேன்.

கைதி : பல நூற்றாண்டுகளாக செய்துவந்ததுபோல் இந்த மனிதர்களை ஏன் மண்ணில் புதைக்க வேண்டும்? நம்புகிறவர்களுக்கு இருக்கிறது போல் நாத்திகர்களுக்கும் உரிமையில்லையா? அவர்கள் இறந்தவர்களின் சடலங்களை தங்களுக்கு விருப்பமான சடங்கில் விட்டொழிக்க? நீங்கள் கூறியது என் எண்ணத்தை ஊர்ஜிதப்படுத்துகிறது. மத விஷயங்களில் கூட இந்த நம்நாடு மிக அகண்ட சகிப்புத் தன்மையோடு மிளிர்கிறது.

தலைவன் : ஆமா...ம்.

கைதி : இந்த கலையையும் கலாச்சாரத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள் மணிக்கணக்காக சிறைச்சாலை அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்து கழித்திருக்கிறேன். ஏனென்றால் நீண்ட செவ்வகமான அறை அது. நேரம் ஓட ஓட என் துடிப்புகளும் அதிகரித்துக் கொண்டே போகும்.

தலைவன் : ஆமாம், நீ அதை ஒத்துக கொண்டுதான் தீர வேண்டும்.

கைதி : நான் சரியாகச் சொல்லிவிட்டேன் பார்த்தீர்களா ?

தலைவன் : நான் ஒரு தேச ஊழியன். இந்த விஷயத்தை நானே தீர்த்து விட முடியாது. அதாவது, நீ மனம் மாறியதை உடனே ஏற்றுக் கொண்டுவிட முடியாது. உன் மனதில் சந்தேகம், தயக்கம் இவை இன்னும் ஒட்டிக் கொண்டிருக்கிறதா என்று முதன் முதலில் ஆராய்ந்தறிய வேண்டும். நீ ரோஜா வண்ணம் பூசிய மூக்கு கண்ணாடிகளால் இந்த விஷயங்களைப் பார்த்து வந்திருக்கலாம். உதாரணத்திற்கு இந்தப் பொருளாதார நிலைமையை எடுத்துக் கொள்ளேன். சிறப்பான விஷயங்களைக் கூட நீ கவனிக்காமலேயே இருந்திருக்கலாம். உதாரணத்திற்கு இந்த ரயில்வே...

கைதி : இந்த நாட்டு நிர்வாக அமைப்பை கடுமையாக எதிர்க்கும் பயங்கரமான விரோதிகூட ரயில்வே ஒரு பேரதிசயமாக இந்தநாட்டில் இருக்கிறது என்பதை மறுக்க மாட்டான். (மௌனம். தலைவனும் கைதியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்கின்றனர். தலைவர் எழுந்திருக்கிறார். மர சாய்வு மேஜையிலிருந்து பின்னாலிருந்து நகர்ந்து மேலும் கீழும் மௌனமாக நடை பழகுகிறார். நிற்கிறார். ஒருகணம் குழந்தைராஜா, மாமா தேசாதிகாரியின் படங்களைப் பார்க்கிறார். கைதி இந்த முழு நேரமும் அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறான்).

தலைவன் : சரி இவர்களைப் பற்றி என்ன சொல்ல முடியும். (படங்களைக் காட்டி) உனக்கு துளிக்கூட தயக்கம் இல்லை என... (பொறுமையிழந்து) இல்லை, உண்மையில் இயலாத ஒன்று.

கைதி : எனக்கு ஒன்றும் புரியவில்லை கர்னல்.

தலைவன் : நிஜத்தில் உன்னிடம் பேசுபவர்கள் நீ ஜெனரல் மீது எறிந்தது ஒரு தக்காளியைத்தான், வெடிகுண்டே அல்ல. (விரைத்து) குழந்தை ராஜா, மாமாதேசாதிபதி (தளர்ந்து) ஒரு முட்டாள் என்றுதான் கூறுவார்கள்.

கைதி : (எரிச்சலில் காலை தரையில் தட்டி) கர்னல்!

தலைவன் : சரி, மிகவும் சரி. போதும். அவர்கள் ஒன்றும் முட்டாள்கள் அல்லர். (மேலும் கீழும் நடந்து) நான் அவர்களுடைய அறிவைப் பற்றிச் சொல்கிறேன். மிகப் பலம் வாய்ந்த மூளைகள்கூட சில நேரங்களில் சின்னஞ் சிறு தவறுகளோடு தத்தளிக்கின்றன. அவை அவர்களின் பழக்கத்தை, ருசிகளைப் பாழ்படுத்தி விடுகின்றன. (எழுந்திருக்கிறான்... கைதியை கண் கொட்டாமல் பார்க்கிறான். கண் சிமிட்டுகிறான். கைதி பதில் சொல்லவில்லை. தலைவன் அருகில் வந்து மீண்டும் அர்த்த புஷ்டி

யுடன் முழுத் தலையையும் கழுத்தையும் அசைத்துக் கைதியின் முன்னால் கண்ணையே வீசி எறிந்து விடுகிறமாதிரி கண் சிமிட்டுகிறான். இது தன்னைப் பார்த்து இல்லை. தனக்குப் பின்னால் நிற்கும் யாரையோ பார்த்து தலைவன் கண் சிமிட்டுகிறான் என்கிற மாதிரி கைதி திரும்பி நிற்கிறான். மௌனம்.)

கைதி : கர்னல், ஏன் என்னைப் பார்த்துக் கண் சிமிட்டுகிறீர்கள்?

தலைவன் : (உட்சட்டை காலர் பொத்தானை வெடுக்கென்று அவிழ்த்தபடி) உன்னைக் கண்டு நீ வெட்கப்பட வேண்டும். பழம்புரட்சியாளன் நீ இப்படி ஒரு கேள்வியைக் கேட்கிறாய்?

கைதி : நீங்கள் சொல்லிக் கொண்டிருந்தீர்களே சிறைவாழ்க்கை. அது கொடுத்த பாடங்களின் பலன் இது... உறுதியாகச் சொல்கிறேன். உங்கள் கண் சிமிட்டலின் பொருளே மறந்து போய்விட்டது. அது ஏதாவது ஒரு ஜாடையா? குழந்தை ராஜா மாமா தேசாதிபதி இவர்களது மனிதர்களின் தொடர்பான ஒரு தரம் கெட்ட சமாச்சாரமா?

தலைவன் : அப்படியானால் நம் தேசாதிபதி ஒரு வக்கிரம் பிடித்த கிழவன் என்று உனக்கே தோன்றவில்லையா?

கைதி : அவரா? அந்த நிஷ்களங்கமான முதியவரா?

தலைவன் : (மீண்டும் அறையைச் சுற்றி நடை பழகுகிறான்) சரி சரி. மிகவும் நல்லது. உயர் இடத்து உத்தரவின் பிரதிநிதியான நான் உன் முன்னேற்றத்தைக்கண்டு உன்னை வாழ்த்துகிறேன். (கை குலுக்க கையை நீட்டுகிறான். கைதி ஏற்றுக் கொள்கிறான்) ஆனால் இதற்குப் பொருள் நாம் களிப்பில் வெடித்துச் சிதற வேண்டும் என்பதல்ல. இது மிகவும் கவனமாகக் கருதப்படவேண்டிய விஷயம். நீ ஒரு உண்மையான மனமாற்றம் அடைந்திருக்கிறாய் என நம்புகிறேன். ஆனால் உன் கதையை நான் அப்படியே நம்பிவிட முடியாது. நீ நம் தேசாதிபதி ஒரு—உனக்கே தெரியும் அது—அது என்று நீ நம்பவில்லை. எதையாவது சிந்தித்துக் கொண்டிருந்தாலும் ஒருவன் எதையும் சிந்திக்காதவன் போல ஒரு சாயலை உண்டாக்குகிறான் என்று உளநூல் வல்லுநர்கள் நமக்கு உரைக்கிறார்கள். இதற்கு நீ என்ன சொல்கிறாய்?

கதை : கர்னல். நீங்கள் சொல்வது சரி. அதுதான் சரியான விஷயம்கூட. சில நேரங்களில், நாம் எதையும் சித்திக்காதவர்கள் போல் தோன்றினாலும் சிந்தித்துக் கொண்டுதான் இருக்கிறோம். எந்த நேரத்திலும் சித்திக்காமல் இருந்தாலும் சிந்திப்பவர்கள் போல் தோன்றுகிறோம். ஆகவே சிந்தனை ஒரு பலம் வாய்ந்த கருவி, கர்னல்!

தலைவன் : (அமர்க்களமாக, அழுத்தமாக, சந்தேகமாக, சோதித்துப்

பார்ப்பது போல்) ஆனால் மானுடத்தின் சேவை கருதி அல்லவோ சிந்தனை !

கைதி : இதுவும் உண்மைதான்.

தலைவன் : (விருப்பமே அற்று) ரொம்ப நல்லது ! இப்பொழுது தயவு செய்து குழந்தை ராஜாவின் படத்தை ஒரு நோட்டம் விடு. சிறியதாகத்தான் உள்ளது இல்லை? புடடம் சிறுத்தவன் !

கைதி : எல்லாக் குழந்தைகளையும் போலத்தான் இருக்கிறார்.

தலைவன் : எல்லாக் குழந்தைகளையும் போல புட்டம் சிறுத்திருக்கிறார் என்கிறாய் ?

கைதி : கர்னல், ஒன்று தெரியுமா உங்களுடைய சீருடைக்காகவும் உயர்ந்த அந்தஸ்துக்காகவும் நீங்கள் உரைத்தது சரி என்று நான் நினைக்க ஆரம்பிக்க முடியாது. போலீஸ் தலைவரே குழத்தைராஜாவின் புட்டம் சிறியதென்று கூறினால் அது உண்மையாக இருக்க முடியாது. ஆனால் கடைவீதியில் இருக்கும் பெட்டிக் கடைக்காரன், ஒரு கொல்லத்துக்காரன் இதைச் சொல்லியிருந்தால் எனக்கு சந்தேகம் எழுந்திருக்கும். ஆனால் போலீஸ் தலைவரே... குழந்தை ராஜா, மாமா தேசாதிபதி இவர்களைக் கண்டு நான் மிகவும் அதிசயிப்பதையும் வணங்குவதையும் இவை உறுதிப்படுத்துகின்றன. (தலைவன் மீண்டும் அமர்கிறான். கைதி ஏழுந்திருக்கிறான். மேஜையை நோக்கி நடக்கிறான். நிற்கிறான். பிறகு தொடங்குகிறான்) தயவு செய்து என்னை நம்புங்கள் ! அரசாங்கத்திற்கு எதிரான என்னுடைய கருத்துக்களை ஏற்கனவே விட்டுவிட்டேன். என்னுடைய மனமாற்றத்திற்கான காரணங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அகம் சார்ந்தவை. புறம் சார்ந்தவை. இந்த இரட்டை மனோநிலைதான் என் மன வளர்ச்சியை நிலை நிறுத்தியது. என் நன்மைக்காக இந்த என் மனோ வளர்ச்சியில் நீங்கள் கவனம் கொண்டீர்கள். வெளிக்காரணங்களைப் பற்றி நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். நம் நாடு எய்தியுள்ள சர்வ வியாபக வளர்ச்சி. செய்தித்தாள்களை நோக்கினால் சீக்கிரம் புரியும். உங்களைச் சுற்றி முற்றும் நோக்குங்கள் கர்னல். சாதனைகளைக் கண்ணுறாமல் உங்கள் தலையை மணலுக்குள் புதைத்து வைக்காதீர்கள். இந்த நாட்டில் என்ன தவறு இருக்கிறது? நீங்கள் பெறும் சம்பளத்தைப் பாருங்கள். அது ஒன்றே இதைப்போன்ற முறையீடுகள் எத்துணை ஆதாரமற்றவை என்பதைக் காட்டும். எப்படியோ, நான் அரசாங்கத்தை ஆதரிப்பவனாக ஆகிவிட்டேனே, அதை ஒத்துக் கொள்ளச் செய்கிறேன். (கைதி அமர்ந்து நாற்காலியை மேஜைக்கருகில் இழுத்துப் போட்டுக் கொள்கிறான். அவனுடைய குரல் அந்தர தொனியை அடைகிறது). இயற்கை விளைவிக்கும்

கிளர்ச்சிகள் மிகவும் பலம் வாய்ந்தவை. ஆகையால் என் மாற்றத்தில் மாறுதல் இருக்காது. இம்மியளவு சந்தேகமுற்றாலும் நான் மற்ற உணர்ச்சிகள், ஊக கிளர்ச்சிகள், உள் கிளர்ச்சிகள் நான் சுயமாக உணரும் மற்ற உணர்ச்சிகளை உங்களுக்கு காட்டுவேன் இதோ பாருங்கள். நான் சிறுவனாக இருந்தபொழுது சட்டம் ஒழுங்கைப்பற்றி, கண்ணியத்தைப் பற்றி ஒரு கருத்தும் இல்லாதவனாக இருந்தேன். எந் நேரமும் சுதந்திரம், சுதந்திரம் பற்றிய சிந்தனைதான். என் ஆத்மஞான உணர்வில் ஏற்பட்ட இந்த அலுப்பு என் ஆளுமையின் ஒரு பகுதியை மட்டும் பூர்த்தி செய்தது. ஸ்தாபனத்தின் கட்டளைகளை எதிர்த்து புரட்சி செய்யும் உணர்வுகள், எல்லாத் தடைகளையும் அதிகாரத்தையும் எதிர்க்க வேண்டும் என்ற விரும்பம் என்னிடம் நிறையவே இருந்தது. ஆனால் காலப் போக்கில் ஏதோ ஒரு அதிருப்தியை நான் உணர ஆரம் பித்தேன். ஏதோ ஒரு வகையில் நான் ஊனமுற்றிருப்பதாக ஒரு முடிவுக்கு வந்தேன். நான் ஒரு சுதந்திரமான கலகக்காரன். மாதிரி புரட்சியாளன், விநோதமான பழம் நினைவுகளை உணர ஆரம்பித்தேன். இது எவ்வாறு? என்று என்னையே நான் கேட்டுக் கொண்டேன், ஏன் இந்த விதி என் னைப் பெருந்துயரில் ஆழ்த்தியது. ஏன் ஒத்துப்போவது, உடனிருப்பது, விசுவாசமாக விளங்குவது, அதில் உள்ள மகிழ்ச்சி, இல்லாமல் போனது? அரசியலில் இல்லாதவற்றை இயலவைக்கும் நிலைமையில் உள்ளமகிழ்ச்சி, இவற்றில் ஏற்படும் இனிமையைக் கவர்ந்து சென்றது எது? இயலாத வற்றில் நானே ஈடுபட்டு முழு நன்னம்பிக்கையோடு கூடிய முனைப்பைத் தரும் மகிழ்ச்சியைத் தட்டிச் சென்றது எது? நான் திருப்தி அடையாத, எதுவும் நிறைவேறாத மனிதனாக இருந்தேன் கர்னல். ஆனால் இறுதி யில் இன்னும் நேரமாகிவிடவில்லை என்பதை உணர்ந்தேன். எப்பொழு தும் கலகத்தில் ஈடுபட்டும், புகார் செய்துகொண்டே இருக்கும் அந்த 'நான்' அதிக ஈடுபாட்டால் அப்பொழுதுதான் அழிந்தொழிந்தது.

மகிழ்ச்சியான அமைதியான இசைந்தொழுகும் குணம், எதிர்காலத்தில் அதிஆவலுடன் ஒரு நம்பிக்கை. அதிகாரத்திற்கு தலை வணங்குவதால் மெள்ளப் பாய்ந்தோடும் அமைதி— இவற்றைத் தன் இரையாகக் கேட்கும் என்னுடைய இரண்டாவது நான் பெருங்குரலிட்டு எழுந்தது. குழந்தை ராஜாவும், மாமா தேசாதிபதியும் (இருவரும் எழுந்து பிறகு அமர்கின்ற னர்) ஆளும் இந்த அரசாங்கமும் மிக நல்லது, அறிவு வாய்ந்தது, நம் போன்று களங்கமற்றது என்ற இந்த மகிழ்ச்சியூட்டும் செய்தி நமக்குள் பேரின்ப உணர்வைத் தூண்டுகிறது. இவற்றை எதிர்மறையான பார்வை யில் பார்த்து சிறையுண்டு கிடக்கும் பாவப்பட்ட ஜன்மங்கள் மானிடப் பிறவியோடு தங்களை இணைத்துக் கொள்ளாதவர்கள்—அவர்கள் இதை அறிவதில்லை. இப்பொழுதுதான், கர்னல். உண்மையான முழுமையை

கைக்கொண்டு விட்டேன் இதோ, நான் விடுதலை பெறும் கடைசிக் கைதி! இத்த நாட்டில் செழித்து சீராகிவிட்டவன் நான்! முழுவதும் நம்பிக்கைக்குப் பாத்திரமான குழந்தை ராஜாவும் மாமா தேசாதிபதியும் ஆளும் நாட்டில் காணும் நீலவான் -- விசும்பினை நீங்கும் கடைசி கரும் மேகம்! ஒழிந்தது மாநிறத்தின் ஸ்படிகமான வானவில்லை தன் கருஞ் சிறகால் நாசமாக்கும் ஒற்றை காகம்! என் காரணம் கொண்டே இந்த போலீஸ் படை இயங்கி வருகிறது. நான் இல்லாவிட்டால் இந்த நீதிபதி களும் பாதுகாவலர்களும் வீட்டிற்கு அனுப்பப்பட்டிருப்பார்கள்! சிறைக் கூடம் காலியாகி ஆரம்பபள்ளி ஆரம்பிக்கப்பட்டிருக்கும். எனக்காகவே கர்னல் இந்த கசகசப்பான அறையில் உலாத்துகிறீர்கள்! இல்லாவிட் டால் மூச்சைப் பிடிக்கும் சீருடையைத் தூக்கி எறிந்துவிட்டு வயல்வெளி களிலோ புல்மேடுகளிலோ துப்பாக்கி அல்லது தூண்டிலோடு சுற்றிக் கொண்டிருப்பீர்கள். நான் ஒன்று சொல்கிறேன் கர்னல்! இறுதியில் நீங்கள் ஜெயித்து விட்டீர்கள். போலீசார் தங்கள் பெரும்பணியை முடித்து விட்டார்கள். அரசாங்கத்தை எதிர்த்த கடைசி மனிதனும் தன் படைக் கலன்களை கீழே போட்டுவிட்டான். குழந்தை ராஜாவுக்கும் மாமா தேசாதிபதிக்கும் ஓசானா பாடும் குழுவில் இடம்பிடிப்பதே அவன் ஒரே விருப்பம். உலகளவில் முதன் முதலாக சட்டமும் ஒழுங்கும் ஒரு மனதாக நிறைவேறிவிட்டது. நான் இத்த இடத்தைவிட்டு நீங்கும்பொழுது கடைசித் தடையும் அகன்றுவிடும், இன்று கர்னல், உங்கள் வாழ்க் கையில் ஒரு பெரும் நாள். இன்று இறுதி வெற்றி எய்திய நாள். ஆயுள் முழுவதும் எதற்காகப் பாடுபட்டீர்களோ, அல்லது எதற்காக நீங்கள் விதிக்கப்பட்டிருந்தீர்களோ அதை அடைந்து வெற்றி மாலை சூடிவிட் டீர்கள். பத்து வருடங்களாக என்னை நீங்கள் கையெழுத்திட வைக்க முயன்ற அந்தக் காகிதத்தில் கையெழுத்திடுகிறேன். அதன் பின் இந்த சுதந்திரமான உலகில் நான் நுழைவேன். அரசாங்கத்தை ஆதரிப்பேன். இதைவிட பெரிய செய்தி மனம் திறந்த கடிதத்தை, இதுவரை எழுதப்பட்டதிலேயே மிகப் பதவிசான கடிதத்தை. அர்ப்பணிப்பு. அன்பால் நிறைந்த கடிதத்தை குழந்தை ராஜா, தேசாதிபதி மாமா இவர்களுக்கு அனுப்பி வைப்பேன்.

தலைவன் : நீ மிகவும் பெருமைப்பட்ட தபால்தலை சேகரிப்பு பற்றி நினை விருக்கிறதா?

கைதி : (அதிர்ந்து போய்) ஆமாம், அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?

தலைவன் : நீ நிஜமாகவே எங்களை விட்டுச்செல்ல நினைக்கிறாயா? என்பதை ஒரு கணம் சிந்தித்துப் பார். உன் மன நிதானத்தை நீ இன்னும் உறுதிப் படுத்திக் கொள்ளலாம். விதைக்கும் முன் பார்த்து விதை என்று சொல் வார்கள். நீ தபால்தலை சேகரிப்பதில் எங்கள் கரங்கள் கூட உதவும். அந்த

தலைகளை அனுப்பி வைக்க சுவாரசியமான பல நாடுகளுடன் நமது ரகசிய ஒற்றர்கள் இருக்கிறார்கள். அதிலுள்ள தபால் தலைகளைக் கிழித்து நனைத்து நீ ஒட்ட, நீ ஆல்பம் தயாரிக்க நாங்கள் உதவுவோம். வெளியே போனால், நல்ல தபால் தலைகளைப் பெறுவது அவ்வளவு சுலபமானதல்ல.

(ஒரு போலீஸ்காரன் வருகிறான்.)

போலீஸ்காரன் : ஐயா, சார்ஜெண்ட் திரும்பி வந்துவிட்டார்.

தலைவன் : உள்ளே வரச்சொல். (சார்ஜெண்ட் வருகிறான். அகன்ற சிவப்பான முகம். எல்லோரையும்விட இரண்டு மடங்கு நீளமான மீசை. நொண்டியடிக்கும் ஒற்றைக்கண்... குழந்தை ராஜா, தேசாதிபதி மாமா படத்தைப் பார்த்து விறைத்து, இடறி நிற்கிறான். ஒரு மழைக்கோட்டு, பச்சைக் குல்லாய் குறுகலான விளிம்போடு இவற்றை அணிந்திருக்கிறான்) நல்லது சார்ஜெண்ட் எப்படி நடக்கிறது எல்லாம்! அட கடவுளே! பெரிய எழவாக இருக்கும் போலிருக்கிறதே! என்ன நடந்தது? (சார்ஜெண்ட் முனகுகிறார்) மிகவும் வலிக்கிறதா? சார்ஜெண்ட் தலையை ஆட்டுகிறான். கைக் குட்டையை எடுத்து கண்ணை அழுத்தி விடுகிறான். தலைவன் போலீஸ் காரனைப் பார்த்து வெளியே போகும்படி சமிக்ஞை செய்கிறான்) சொல்லும் இப்பொழுது?

சார்ஜெண்ட் : ஐயா, காரியகர்த்தனான நான் என் கடமைகளில் ஒன்றான அரசாங்க எதிர்ப்புக் கோஷங்களைப் போட முயன்று கொண்டிருந்தேன். அனைவரும் சேர்ந்து என்னை அடித்துப் போட்டுவிட்டனர்.

தலைவன் : யார் உன்னை அடித்தார்கள்? உன்னை... அவர்கள் யாரென்று உனக்கு...

சார்ஜெண்ட் : துரதிர்ஷ்ட வசமாக இந்தக் கேள்விக்குப் பதில்' ஆமாம்'தான். விசுவாசமான மக்கள் வெள்ளம்தான் என்னை அடித்து வீழ்த்தியது.

தலைவன் : (கசப்பாக தனக்குள் எதையோ முணுமுணுத்தபடி) இதெல்லாம் நான் எதிர்பார்த்ததே...

கைதி : ஆமாம் கர்னல், என்னுடைய கடமைத் தத்துவத்திற்கு நான் ஈடு கொடுத்துநின்று கொண்டிருக்கிறேன் (லேசாக வலியில் சாய்கிறான்.)

தலைவன் : (சுளீரென்று) தயவு செய்து குறுக்கே பேசாதீர்... சார்ஜெண்ட்... எனக்கு அந்த விபரங்கள் வேண்டும்.

சார்ஜெண்ட் : உங்கள் கட்டளைகளைப் பெற்றவுடன் அவற்றை நடைமுறைப் படுத்த கிளம்பினேன் நான் வெறுப்பது ஒன்று உண்டென்றால் அது சாதாரண உடைகளைத்தான். இருந்தாலும் ஒரு சாதாரண உடையை வாங்கிக்கொண்டேன் என் மாறுவேடத்தை இன்னும் ஜோராகப்

செய்ய குறுகலான விளிம்போடு கூடிய பச்சைத் தொப்பியையும், மழைக்கோட்டையும் பெற்றுக் கொண்டேன். அப்புறம் தெருவில் நடக்க ஆரம்பித்தேன். மிகத் துணிச்சலோடு எடை அளவு களைக் கட்டுப்படுத்தும் அரசாங்க அலுவலகம் முன் நடைபயின்று கொண்டிருந்தேன். என்னைக் கவனிப்பார் யாருமில்லை. ஆகவே சதுக்கத்திற்குச் சென்று குழந்தை ராஜா, தேசாதிபதி மாமா (எழுந்து உட்கார்கிறான்) சிலைகளுக்கு முன்னால் முகத்தைச் சுளித்துக்கொண்டே நின்றேன். எல்லோரும் பரபரப்பாக எங்கெங்கோ சென்று கொண் டிருந்தார்கள். என்னைக் கவனிப்பாரில்லை. பிறகு கிளம்பி பீர் விற்கும் கடை வாசலில் உள்ள வரிசையில் நின்றேன். சுற்றும் முற்றும் பார்த் தேன். சுற்றிலும் சாமானிய மனிதர்கள் சாதாரண குடிமக்கள். மாதம் 500, 600 சம்பளம் வாங்கும் ஜென்மங்கள். 'இது மிகவும் நல்லது' என எனக்குள் எண்ணிக் கொண்டேன். வரிசை நகர்ந்தபடி இருந்தது. நகர்ந் தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்? இறுதியில் ஒரு யோஜனை வந்தது. என் முறையும் வந்தது. அந்த மனிதனிடம் சொன்னேன் இயல்பான குரலில் ''தயவு செய்து இரண்டு பின்ட். சரியாக. விறுவிறுப் பாக''. அரச பரம்பரைகான் இந்த பீரை நுரைத்து வடித்த மாதிரி, அவன் எதையோ எடையைக் குறைக்கிற மாதிரி அவன் முட்டாள்தன மாக என்னைப் பார்த்தான் அல்லது அவன் சரியாகப் புரிந்துகொள்ள வில்லையோ என்னவோ... ஏதோ... என்னைக் கேட்டான். ''மிருது வாகவா? மிகவும் புளிப்பாகவா'' நேரடியாகவே அவனைக் கேட்டேன். ''நம் விவசாய முறை நாசமாகி சாக்கடையில் கிடக்கிறது. இங்கு திருடவில்லையென்றால் பட்டினி கிடந்து சாக வேண்டியதுதான்'' அப்பொழுது வரிசையில் வந்தவர்கள் என்னை நெருங்கி வந்தார்கள். அதில் ஒருவன் என்னை நான் ஏதாவது ஜாடை பேசுகிறேனா என்றும், தான் ஒரு அரசாங்க ஊழியனாக இருப்பதால் இந்த அவமதிப்பைத் தன்னால் பொறுத்துக் கொள்ள முடியாது என்றும் சொன்னான். பிறகு நான் எல்லாவற்றையும் எடுத்துக் கூற ஆரம்பித்தேன். விவசாயத்தின் நிலைமை, வெளிநாட்டு வாணிபம், அப்புறம் போலீசைப் பற்றி, குறிப் பாக, ரகசியப் போலீசைப் பற்றி சில வார்த்தைகள். அப்பொழுது துணிக் குல்லாய் அணிந்திருந்த இளைஞன் அந்தக் கூட்டத்திலிருந்து என்னை நோக்கி வந்தான். ''நம் போலீசைப் பற்றி எதுவும் பேசாதே'' என்ற வன் தொடர்ந்து சொன்னான். ''அடுத்து நம் சைனியத்தைப் பற்றி பேச ஆரம்பிப்பாய். தேசிய ராணுவத்தைக் குறை சொல்வாய் அல்லது அடியோடு அது வேண்டாம் என்பாய். அடுத்த இலையுதிர்காலம் ராணு வத்திற்கு ஆளெடுக்கும் கமிட்டிக்கு முன்னால் போய் நிற்கவேண்டியுள் ளது எனக்கு'' அதன்பின் சற்று தூரத்தில் நின்றுகொண்டிருந்த ஒரு

கிழவன் முணுமுணுக்க ஆரம்பித்தான். ''ஆக இந்த ஆளுக்கு போலீஸ் என்றால் பிடிக்கவில்லை உம்... சென்றவாரந்தான் என் வீட்டை சோதனையிட சம்மன் அனுப்பிவைத்தார்கள். இந்த ஆளுக்கும் இப்படி ஏதாவது நடக்கும் என நினைக்கிறேன். சோதனைக்குப் பிறகுதான் எனக்கு மிகவும் ஆறுதலாகவும் ராஜ பக்தியாகவும் இருக்கிறது. வீடு சோதனை போடப்படாவிட்டால் ஒரு பரபரப்பே வந்துவிடுகிறது'' என்று சொன்னான். ஆனால் ஒன்று சொல்கிறேன் கர்னல். நான் சிறுவனாக இருந்தபொழுதிலிருந்தே போலீஸில் இருக்கிறேன். இந்த ஏஜண்ட் வேலை புனிதமாயிருந்தாலும்கூட மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இந்த சாதாரண ஆடைகளை அணிந்து அணிந்து எனக்கு மனச்சீக்கே வந்து விட்டது. இருந்தாலும் நான் எதைப் பற்றியும் கவலைகொள்ளாமல் வழக்கமான விஷயங்களைப் பற்றி—வருமான வரி, சுகாதார சேவை குழந்தை ராஜாவைப் பற்றி (எழுந்திருக்கிறான்) மாமா தேசாதிபதியை பற்றி (உட்கார்கிறான்) ஏராளமாகப் பேசினேன். எல்லோரும் கத்தி னார்கள். ''ஆகவே நீ அவர்களில் ஒருவன் இல்லை? இங்கு நின்று கொண்டு எங்கள் அன்பான தலைவர்களை அவமதித்துக் கொண்டிருக் கிறாய்'' எல்லோரும் சேர்ந்து நையப் புடைத்தார்கள்.

கைதி : என்ன அருமையான மனித மந்தைகள் !

சார்ஜெண்ட் : கர்னல், அவர்கள் என்னை புடைத்தெறிந்தது என் மனதில் எதிரெதிரான இரண்டுவிதமான உணர்ச்சிகளை உண்டாக்கியது! இன் மான உணர்சிகள்! துன்பான உணர்ச்சிகள்! உங்கள் ஆணைகளை நிறைவேற்ற முடியவில்லை! யாரையும் ராஜத்துரோகியாக்கமுடிய வில்லை! கைது செய்ய எஞ்சியிருப்பார் எவருமில்லை ஆனால் ஒருவித மகிழ்ச்சி! ஒரு அன்பும் மரியாதையும் நமது அரசாங்கத்திடம், மரியாதையும் நமது குழந்தை ராஜாவிடம் (எழுந்திருக்கிறான்) மாமா தேசாதிபதியிடம் (உட்கார்கிறான்) இந்த அன்பு பரவி எல்லாருடைய உள்ளத்தில் பாய்ந்து என் கண்களில்கூட அது ஜொலித்தது.

கைதி : (பாதி தனக்குள், மிக்க ஆர்வத்துடன்) எத்தனை அதிசயமான நாடு! எத்தனை அதிசயமான மக்கள்!

தலைவன்: உன் கொள்ளிக் கண்ணில் இறைச்சி கண்டத்தை வைத்துக்க.

கைதி : கர்னல், சார்ஜெண்ட் சொன்னவற்றைக் கேட்டு ஆழமாக வெட்கப் படுகிறேன். முன்னாள் கொள்கைகளை உதறி எறிய ஆசைகொள்ளுகிறேன். அவற்றை நினைக்கவே எனக்கு வெறுப்பு உண்டாகிறது ஒப்பு பத்திரத்தில் கையெழுத்திடுகிறேன் நல்ல பேனாவையும் மையும் தரமுடியுமா?

தலைவன் (துயரத்தோடு) அப்பொழுது நீ முடிவு செய்து விட்டாயா?

கைதி : என் முடிவை எதுவும் மாற்ற இயலாது. பழைய நினைவுகளோடு. ஞாபகங்களோடு இந்த கட்டிடத்தை நீங்கி நான் நேராக ஒரு வேலைக்கு மனுப்போடப் போகிறேன் தயுவு செய்து அந்த காகிதத்தை தாருங்கள்!

தலைவன் : உனக்கு தபால் தலைகளைப் பற்றிக் கவலையில்லை அப்படித் தானே?

கைதி குழந்தை ராஜா (எழுந்திருக்கிறான்) தேசாதிபதி மாமா (உட்கார் கிறான்) வுக்கான சேவையில் சேரப்போகிற நான் ஏன் தபால் தலை களைப் பற்றி கவலைப்பட வேண்டும்? ஆர்வத்தை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது தபால் தலை சேகரிப்பவனின் ஆர்வம் ஒன்றுமே இல்லை. நெடு நாட்களாக அராஜகவாதியாக காலந்தள்ளிவிட்டு விசுவாசத்தால் ஏற்படும் மகிழ்ச்சியைக் கண்டுபிடித்த எனக்கு தபால்தலை ஆல்பத்தால் என்ன பயன்?

தலைவன் : சரி, இனிமேல் உன்னைக் கட்டாயப்படுத்த மாட்டேன். இதோ மை, பேனா, பேப்பர் நீ கேட்டது கிடைத்துவிட்டது (கோபத்தோடு அவற்றை அவன் முன் வைக்கிறான்)

கைதி: இறுதியில் (கையெழுத்திடுகிறான்) (தலைவன் அவனிடமிருந்து காகி தத்தை எடுத்து ஊதி மையை ஆற்றுகிறான் காய வைக்கிறான் மணியடிக் கிறான். போலீஸ்காரன் வருகிறான்)

தலைவன் : அவனுடைய பொருட்களை கொண்டுவா. (போலீஸ்காரன் போகிறான். கைதியிடம்) என்னை ஏமாற்றிவிட்டாய். நீ நீண்டகாலம் தாக்கு பிடிப்பாய் என்று நினைத்தேன் நீ துளிகூட ஆட்டங்காணாமல் இருந்த வகை என்னைக் கவர்ந்தது. (போலீஸ்காரன் கைதியின் பொருட் களுடன் வருகிறான் கழுத்துப்பட்டைதுணி. ஒரு முகமூடி. குண்டு)

தலைவன் உன்னைக் கைது செய்தபொழுது உன்னிடம் கைப்பற்றிய பொருட் கள். அவற்றைக் திருப்பக் கொடுக்க வேண்டியது என் கடமை.

கைதி : கடந்த காலத்தின் பேய்கள்! (போலீஸிடமிருந்து ஆடையை வாங்கி தோள்மேல் போட்டுக்கொள்கிறான். முகமூடியைச் சட்டைப்பையில் வைத்துக் கொள்கிறான். போலீகாரன் குண்டை அவன் கையில் கொடுக்கிறான்) ஓ... எனக்கு அது தேவையில்லை. எனக்கும் அதற்கும் உள்ள உறவு முற்றிலும் முடிந்துவிட்டது. கர்னல், என்னுடைய பரிசாக, நாம் சந்தோஷமாக கழித்த நாட்களுக்கு அடையாளமாக ஒரு நினைவுப் பொருளாக இந்தக் குண்டை ஏற்றுக் கொண்டால் நான் திருப்தியடைவேன். ஒரு தந்தைபோல் என்னை நீங்கள் வென்றெடுத் ததற்கு அடையாளமாக இருக்கும். கடைசிப் புரட்சியின் எச்சசொச்சங்கள் இவை. நீங்கள் இந்த முகமூடியையும் எடுத்துக் கொள்ளலாம். (பாக் கெட்டிலிருந்து முகமூடியையும் எடுக்கிறான்)

தலைவன் : உன் விருப்பப்படியே. (பற்றில்லாமல் குண்டையும் முகமூடியை யும் கைதியிடமிருந்து வாங்கி மேசை டிராயரில் வைக்கிறான்)

கைதி : உங்களை வாழ்த்த அனுமதியுங்கள் கர்னல். கடைசிப் புரட்சியாள னும் இறந்துவிட்டான். புதிய குடிமகன் தோன்றி விட்டான். உங்கள் இடத்தில் நான் இருந்தால் ராக்கெட்டுகளை ஏவ உத்தரவிடுவேன். என்னுடைய பணியாளர்களுக்கு மூன்று நாட்கள் விடுமுறை கொடுப் பேன். ஏன் மூன்று நாட்கள் மட்டும்? இனிமேல் அவர்களுக்கு இங்கே ஒன்றுமே வேலை இல்லையே குட்பை! எல்லாவற்றிற்கும் என்னு டைய நன்றி! (தலைவரின் கையை முத்தமிடுகிறான். பிறகு—சார் ஜெண்ட் கையை. பிறகு போலீஸ்காரனின் கையை முத்தமிடுகிறான். கதவு வழியாக வெளியேறுகிறான் போலீஸ்காரன் about turn செய்து வெளியே போகிறான். தலைவனும் சார்ஜெண்ட்டும் அமைதியாக விடப் படுகின்றனர். திடீரென்று வானைக் கிழிக்கும் குரல் ஜன்னல் வழியே கேட்கிறது—தெருவில் செல்லும் கைதியுடையது)

கைதி : (திரைக்குப் பின்னால்) குழந்தை ராஜாவும், மாமா தேசாதிபதியும் வாழ்க!

தலைவன் : (முகத்தைக் கைகளால் மூடியபடி, உடைந்து போய்) கடவுளே... கடவுளே...

சார்ஜெண்ட் : (கனவிலிருப்பது போல்) ஒரு பேராசை எனக்கு; அவனை சீண்டி, அவனை விசுவாசமற்றவனாக. கெட்டவனாகச் செய்ய முடியு மானால்...

## அங்கம் 2

(ஏஜண்டின் (சார்ஜெண்ட்டின்) வீடு. சுவற்றில் குழந்தை ராஜா, மாமா தேசாதிபதியின் படங்கள். சார்ஜெண்ட் அவனது மனைவி சேர்ந்துள்ள திருமணப் படம். ஒரு கதவு ஜன்னல் தெரிகிறது. இரண்டு நாற்காலிகள். மேஜை. சார்ஜெண்ட்டின் மிகப் பெரிய உடை (டம்மி உடை), நிறைய மெடல்களுடன். அருகே ஒரு சிறிய திரை. அதன் கீழ் பெரிய ஜோடு. ஒரு சிறிய அத்தி (அல்லது பனையோ?) மரம். உடற்பயிற்சிக்கான சிறிய கர்லாகட்டைகள் சிறிய மேஜை. ஏஜண்ட்டின் மனைவி மேடையில் இருக்கிறாள். தலைவன் (அங்கம் 1ல் சொல்லியுள்ள உடையில்) ஆனால் சீருடை மேல் நீண்ட வாள்.

தலைவன் : (கோட்டின் காலர் கண்ணை மூடியுள்ளது) குட் மார்னிங்! உங்கள் கணவர் வீட்டிலிருக்கிறாரா!

மனைவி : அவர் இன்னும் வேலையிலிருந்து திரும்பி வரவில்லையே!

தலைவன் : திரும்பி வரவில்லையா? இன்று ஓய்வு நாளாயிற்றே அவனுக்கு

மனைவி : அவருக்கு ஓய்வு நாட்கள் பிடிப்பதே இல்லை. நீங்கள் ஏன் அவரைப் பார்க்க வேண்டும்? (தலைவர் அறையின் நடுவே வருகிறார். கோட்டின் மேல் உள்ள நீண்ட அங்கியைத் தூக்கி எறிகிறார்) கர்னல்! உங்களை அடையாளம் தெரியவே இல்லை:

தலைவர் : உஷ்... உரக்கப் பேசாதே! உன் கணவன் எப்பொழுது வருவேன் என்று சொன்னானா ?

மனைவி : இல்லை... மக்களை சீண்டிவிட நகரத்திற்குப் போனார்...எப்பொழுது வருவாரென்று எனக்குத் தெரியாது...

தலைவன் : பேச்சில் குறுக்கிடுகிறேன். நீங்கள் தைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இல்லையா ?

மனைவி : (வெட்கமுற்று, அந்த வேலையை விட்டுவிட்டு) ஆமாம், கணவரின் உள் ஆடைகளுக்கு தங்க ஜரிகை வைத்து தைத்துக்கொண்டிருக்கிறேன். சாதாரண உடைகளை அணிந்து அணிந்து சலித்துப் போய் விட்டது அவருக்கு. துளியாவது ராணுவ உடைகளை அணிய விரும்புகிறார். அது கீழ்ப்பகுதி உடையாயிருந்தாலும் சரி என்கிறார். (திடீரென்று குரலை மாற்றி, தேடுகிறாற்போல்) கர்னல்.

தலைவன் : என்ன ? என்ன ? சொல்லுங்கள் !

மனைவி : அவரை இந்த வேலையிலிருந்து எடுத்து விடுங்களேன். சாதாரண உடையில் இனிமேல் அவர் ஜனங்களை சீண்ட வேண்டாமே !

தலைவன் : ஏன் வேண்டாம் ?

மனைவி : உங்களுக்குத் தெரியாது. இதனால் அவர் எவ்வளவு வெளுத்து மெலிந்து போயிருக்கிறார் என்று. சாதாரண உடையில் இருக்கிறோமே என்று சதாசர்வகாலமும் வாடுகிறார். சீருடையில்லாமல் இனிமேல் அவரால் வாழ முடியாதாம். உதிர்ந்து கொண்டிருக்கிறார் அவர்.

தலைவன் : அம்மணி, இது மிக மோசமான விஷயம். சீண்டி விடுவதை சாதாரண உடையில்தானே செய்ய முடியும் ?

மனைவி : அவருடைய தலைக் கவசத்தையாவது அவர் அணிய முடியுமா? அதை அணிந்தால்தான் தெம்பாக இருக்கிறது என்கிறார்.

தலைவன் : இல்லை, முடியாது அம்மணி! தலைக்கவசம் கவனத்தை ஈர்க்கும்.

மனைவி : (தன்னம்பிக்கையோடு) இருக்கட்டும். அவர் ஆட்களைக் கைது செய்து நீண்ட நாட்களாகிவிட்டது. உங்களுக்கெதிரில் இதைக் காட்டிக் கொள்ள மாட்டேன் என்கிறார் கர்னல், வீட்டில் வெடுவெடுவென்று இருக்

கிறார். என்னால் தாங்க முடியவில்லை. ஒருத்தரைக் கைது செய்தால் எல்லாம் சரியாகப் போய்விடும்.

தலைவன் : (தடபுடலான குரலில்) ஏஜண்ட் இல்லாமல் எப்படி ஒருவரைக் கைது செய்வது ?

மனைவி : (ஊக்கமில்லாமல், துயரத்தோடு) எனக்கு நம்பிக்கை போய் விட்டது.

தலைவன் : நாம் கைது செய்யக்கூடிய மனிதர்கள் இருக்கிறார்களா? அவர் களைத் தெரியுமா உங்களுக்கு ?

மனைவி : இல்லை ! எனக்குத் தெரிந்தவர்கள் எல்லாம் பரம விசுவாசிகள். அப்படி ஒருத்தர் இருப்பார் என்றால் அது என் கணவர்தான் என்பேன். அவருக்கு கொஞ்சம் அமைதி அளிக்க இதை நான் அவரிடமே கூறுவேன்.

தலைவன் : உங்கள் அண்டை அயலார் யாராவது ? தூரத்துச் சொந்தக் காரர்கள் எவரேனும் ?

மனைவி : இல்லை ! அவர்கள் சட்டத்திற்கு கட்டுப்பட்ட பிரஜைகள் ! எப் பொழுதும் முறையீடு செய்து முணுமுணுக்கும் கிழவன் ஒருவன் இருந் தான் ! முறையீடு அரசாங்கத்தைப் பற்றியதல்ல ! அவனுடைய கீல்வாத வலியைப் பற்றியது ! மிகவும் கவனமாக இருந்தால்தான் என நினைக் கிறேன். அவனும் செத்துப் போய்விட்டான்.

தலைவன் ; ஆமாம், இந்தக் காலத்தில் எல்லாம் மௌனமாக அமைதியாக நடந்து விடுகிறது. சொல்லுங்கள் ! உங்கள் கணவனை நீங்கள் எப்படிச் சந்தித்தீர்கள் ?

மனைவி : ஓ... அது பல காலங்களுக்கு முன். கர்னல் ! என்னைப் பற்றி ரகசிய போலீஸிடம் அவரும் அவரைப் பற்றி நானும் முறையிட்டோம். இப்படித்தான் எங்களுக்கு ஒருத்தருக்கொருத்தர் தெரிய வந்தது !

தலைவன் : உங்களுக்குக் குழந்தைகள் ஏதேனும் இருக்கிறதா ?

மனைவி : இரண்டு ! ஆனால் இப்பொழுது பூட்டி வைந்திருக்கிறோம் ! கீழே போய் கூட்டிக்கொண்டு வரட்டுமா ?

தலைவன் : இல்லை, தயவு செய்து வேண்டாம். உங்களுக்கு சிரமமளிக்க நான் விரும்பவில்லை. உங்கள் கணவனை சந்தித்து ஓரிரண்டு வார்த்தைகளைப் பேசிவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.

மனைவி : அவர் இப்பொழுது திரும்பி வரக்கூடும். மாடிப்படிகளில் ஏறிவரும் பொழுது கதவுகளில் காதை வைத்துக் கேட்டுக்கொண்டிருப்பார். நான் போய் பார்த்துவிட்டு வருகிறேன். (போகிறாள் மாடிப்படிகளில் மெது தான காலடி ஓசை. ஜன்னல் வழியே சார்ஜெண்ட் வருகிறான், சாதாரண

உடையில். மழைக் கோட்டையும், சிறிய பச்சைக் குல்லாவையும் கை களில் ஏந்தி வருகிறான்.

சார்ஜெண்ட் : கர்னல் என் வீட்டில் உங்களைப் பார்ப்பது ஆச்சரியமாக உள்ளது! மிகவும் அதிசயந்தான்,

தலைவன் : அட... நான் ஆபிஸ் என்ற ஹோதாவில் வரவில்லை. ஏன் என்று பிறகு சொல்கிறேன். நீர் ஏன் கதவு வழியாக வரவில்லை?

சார்ஜெண்ட் : எப்பொழுதுமே நான் வீடு திரும்பும்பொழுது வீட்டுக் கூரை களின் மீது நடந்துதான் வருவேன். இது நடுவழி. ஏதாவது இங்கு நடக்கலாமே! மேலும் வீதிகளில் நடந்து போகும்பொழுது இவ்வளவு அமைதியில்லை!

தலைவன் : இன்று என்ன கண்டீர்?

சார்ஜெண்ட் : ஒன்றுமே இல்லை கர்னல்! சில பறவைகளை மட்டும் பார்த் தேன்! என் மனைவி இங்கு இருக்கிறாளா?

தலைவன் : அவள் மாடிப்படி பக்கம் போனாள்! நீங்கள் அங்கு இருக்க லாம் என்று நினைத்தாள் அவள்;

சார்ஜெண்ட் : மாடிப்படிப் பக்கம் செல்லும் பொழுதெல்லாம் கதவுகளில் ஏதாவது கேட்கிறதா என்று பார்க்கிறாள் அவள். நான் உடைமாற்றிக் கொள்வதை ஒரு பொருட்டாக நினைக்க மாட்டீர்கள் என எண்ணு கிறேன் கர்னல். சீருடை அணியாமல் இருப்பது நிர்வாணமாக நிற்பது போல் தோன்றுகிறது!

தலைவன் : சரி, சரி. நீங்கள் விருப்பப்பட்டால் உடைகள் மாற்றிக் கொள்ளலாம்! நீங்கள் உங்கள் வீட்டில் இருக்கிறீர்கள் இன்று உங்கள் ஓய்வு நாள் வேறு.

சார்ஜெண்ட் : (சிறிய திரைக்குப்பின் சென்று) ஐயா, நான் அதை அறிவேன், அதை அறிவேன். ஒன்று தெரியுமா? இன்று மிகவும் அதிர்ஷ்ட மான நாள் என்று எண்ணி வெளியில் கிளம்பிப் போனேன், நண்பகல் உணவிற்கு முன். சிறிது சீண்டிப் பார்த்தேன். ஆனால் வழக்கப்படி ஒரு பிரயோஜனமுமில்லை. அவர்கள் ‘ஹலோ’ சொன்னபடி போய்க் கொண்டே இருந்தார்கள்.

தலைவர் : சார்ஜெண்ட், நீர் மட்டும் இருந்திராவிடில் குற்றவாளிகளின் எண்ணிக்கையில் இப்படி அதிர்ச்சியளிக்கும் அளவுக்கு சரிவு நேர்ந் திருக்குமோ என்னவோ? நான் சொல்ல வருவது என்னவென்றால் சட்ட ஒழுங்கை இவ்வளவு நேர்த்தியாக வைத்திருப்பதற்கு என்னுடைய நன்றி.

சார்ஜெண்ட் : (திரைக்குப் பின்னால், இன்னமும் தன் உடையை மாற்றிக் கொண்டபடி) இது ஒன்றுமே இல்லை கர்னல்! இன்னொரு முறை

சென்று ஒருதரம் முயற்சித்துப் பார்க்கலாம் என நினைத்தேன். நிஜத்தில் இதைச் செய்ய எனக்கு மிக்க ஆவல். (மௌனம். சார்ஜெண்ட் உடை மாற்றிக் கொள்வதை முடிக்கிறார்) வாள், பதக்கங்களோடு முழுச்சீருடையில் வெளித் தோன்றுகிறார். தாமதமாக விரைத்து நிற்கிறார்) ஆ! எவ்வளவு சுதந்திரமாக இருக்கிறது! இறுதியில், உண்மையான ஓய்வை உணர்கிறேன்! வேலை முடிந்து, வீடு சேர்ந்து ஆடைகளை மாற்றி சீருடையில் ... ஆஹா... இது எவ்வளவு உன்னதமானது என்பதை உங்களால் உணர முடியுமா... ஓ ... ஓ... மன்னிக்க வேண்டும் கர்னல் (மிக நெருக்கமாகப் பழகுவதை உணர்கிறான். விறைப்பான நிலைக்கு வந்து) ராணுவத்தில் பணிபுரிவதால் வந்த வினை இது. அறக்கோட்பாடுகளுக்கு ஒத்துப் போகாத இந்த சாதாரண உடைகள். பாருங்கள் ஐயா ; நானே என்னை ஒரு பிடிமானத்தில் வைத்திருக்க வேண்டியிருக்கிறது.

தலைவன் : ஓ... நீர் அதைப்பற்றிக் கவலையுற வேண்டாம். உம்மிடம் விவாதிக்க வேண்டிய ஒரு முக்கியமான விஷயம் உள்ளது. ஏதாவது சாக்கு போக்கு சொல்லி உம் மனைவியை வெளியில் அனுப்பி விடும். அவள் இங்கு வந்துவிடக்கூடாது. அவள் நம்பகமானவள்தான். இருந்தாலும் மிகவும் ரகசியமான ஒன்றைப் பேச வேண்டும், (சார்ஜெண்ட் வெளியில் போகிறான். மாடிப்படிகளில் செல்லும் காலடி ஓசை தேய்கிறது. தலைவன் கோட்டைக் கழற்றிவிட்டு உட்காருகிறான். காலடி ஓசைகள். சார்ஜெண்ட் வருகிறான்)

சார்ஜெண்ட் : தண்ணீரே சேராத கூழ் கோந்து வாங்கி வரச்சொல்லி அவளை அனுப்பிவிட்டேன்.

தலைவன் : இதைவிட நல்ல சாக்கே உமக்குத் தோன்றவில்லையா?

சார்ஜெண்ட் : இது சாக்கில்லை ஐயா! நிஜத்தில் எனக்கு அது தேவைப்படுகிறது. போன தடவை என்னை அவர்கள் போட்டு அடித்த அடியில் என் மழைக்கோட்டு கிழிந்து போய் விட்டது.

தலைவன் : ஓ... சரி... சரி அவள் போய்விட்டாளா?

சார்ஜெண்ட் : இன்னும் முக்கால் மணி நேரத்திற்கு அவள் திரும்பி வர மாட்டாள்.

தலைவன் : என்னுடைய வருகை உமக்கு மிகவும் ஆச்சரியத்தை தந்துள்ளது என நம்புகிறேன்.

சார்ஜெண்ட் ; ஐயா! நீங்கள் சொல்வதுதான் நான் நினைப்பதும்.

தலைவன் : அப்பொழுது மிக ஆச்சரியமடைந்து விட்டீர். இல்லையா?

ர்ஜெண்ட் : ஆமாம் ஐயா ! போலீஸ் தலைவர் என்னுடைய இல்லத்திற்கு! ஒரு புரட்சியையே எதிர்பார்க்கிறேன் கூடிய விரைவில் !

லைவன் : இப்படியெல்லாம் மனப்பால் குடிக்க வேண்டாம் சார்ஜெண்ட்! கருத்துமிக்க சார்ஜெண்ட் எப்பொழுதும் ஒரு புரட்சிக்குத் தயாரரக இருக்க வேண்டும்! நான் இதைச் சொல்ல வரவில்லை. உம்முடைய பணி ஒரு மாசு, மரு, குற்றங்குறை இல்லாதது.

ர்ஜெண்ட் : ஆமாம் கர்னல் ஆமாம்.

லைவன் : மேலும் உம்முடைய நடத்தையில் சாதாரண மனசாட்சி கடமை உணர்வு இவற்றைவிட ஏதோ ஒன்று தூக்கலாகத் தெரிகிறது. (சார்ஜெண்ட் விறைப்பான நிலைக்கு வருகிறான்) இல்லை, நீர் அதைப்பற்றி எதுவும் கவலைப்பட வேண்டாம். உட்காரும்,

ர்ஜெண்ட் : நீங்கள் அனுமதித்தால், தவறாக நினைக்காவிட்டால், நான் என்னுடைய உடற்பயிற்சிகளைச் செய்வேன் கர்னல்.

லைவன் : உங்களுடைய உடற்பயிற்சிகளைத்தானே ?

ர்ஜெண்ட் : எப்பொழுதும், நான் வீடு திரும்பும் இந்த நேரம் இத்தப் பளு தூக்கும், சுருள் கம்பி உடற்பயிற்சிகளைச் செய்வேன். எந்த நிலைமையையும் நான் எதிர்கொள்ள வேண்டுமே! என் தசைகளுக்கு ஏற்ற உடற்பயிற்சி (முண்டாவை வளைத்துக் காட்டுகிறான்). நீங்களும் சற்று முயற்சித்துப் பார்க்கிறீர்களா?

லைவன் : நன்றி. இல்லை... வேண்டாம். இங்கிருந்தே தெரிகிறது நீர் உடற்பயிற்சி செய்யும் (சார்ஜெண்ட் சட்டை கைகளை மடித்து விட்டு சிறிய கர்லாகட்டைகளோடு தலைவன் இருக்குமிடத்திற்கு வருகிறான். தலைவரின் பேச்சைக்கேட்டபடி நுணுக்கமான அழகுகள் வாய்ந்த பாணியில் கர்லாக்கட்டைகளை சுழற்றுகிறான். பலமாக இறுகிவிட்டதா என அடிக்கடி தன் முண்டாவை சரிபார்த்துக் கொள்கிறான் இவ்வளவு பொழுதும் தன் தலைவனோடு உரையாடிபடியே) முன்னமேயே சொன்னேனே! நீர் ஒரு சிறந்த போலீஸ்காரர்மட்டும் இல்லை. நீர் அதைவிட உயர்தவர் என்பதை நான் கண்டு கொண்டு விட்டேன்

ர்ஜெண்ட் : (மிகவும் அடக்கமான பாணியில்) ஐயா!

லைவன் : நீர் ஒரு சரியான கருத்தை எனக்கு நல்கிவிட்டீர்! எனக்குப் புரிகிறது!

ர்ஜெண்ட் : (முன்னமேயே சொல்லியபடி) ஐயா, ஆமாமா... ம்ம். ஐயா!

லைவன் : உம்மால் முடியாவிட்டால் கூட உம்முடைய வேலைக்காக சாதாரண ஆடைகளை அணிந்து நிற்கிறீர்!

சார்ஜெண்ட் ஆமாமா ... ம்ம் ... ஐயா எனது தொழிலுக்காக எதையும் செய்வேன் ஐயா!

தலைவன் சரியாகச்சொல்கிறீர்! மாநிலத்திற்குப் பணியாற்ற வேண்டி உமது சொந்த வெறுப்பு விருப்புகளை நீர் தியாகம் செய்கிறீர்! ஆனால் அது முக்கியமானதல்ல. செயல்கள் மிகச் சிறியனவாக இருந்தாலும் இந்தச் செயல்களுக்காக நீர் மேற்கொள்ளும் மிகுந்த ஆர்வம்! தயார் நிலை! கடமையாற்றும் உணர்வு இவை மிகவும் அதிகப்படியானது என்ற முடிவுக்கு வந்துள்ளேன். நன்கு ஆராய்ந்த பிறகு அரசாங்க உத்தியோகஸ்தர்களில் நீர் சற்று அதிசயமான ஆசாமி சார்ஜெண்ட் ஐயா மரங்களை வெட்டும், தண்ணீர் இறைக்கும் ஒரு ஹெர்குலிசை என் மனதில் முத்திரையாக குத்துகிறீர் நீர். இது கடினமான, உபயோகரமான வேலைதான் ஆனால் ஹெர்குலிஸின் வேலை அல்ல. உன்னிடம் ஒரு பலம் இருக்கிறது கர்னல், ஆனால் அந்தத் தெம்புக்கு வடிகாலாக இந்த சின்னஞ்சிறு வேலைதான் இருக்கிறது. ஒழுங்கு, பொதுக்கட்டுபாடு என்ற கருத்துக்களால் நீர் மிகவும் கவரப்பட்டிருக்கிறீர். போலீஸ்படையில் நீர் ஒரு ஆன்மிகவாதி. போலீஸ் சந்நியாசி. ஏன் இப்பொழுது நீர் மிகவும் இளைத்துப்போய்விட்டீர் சார்ஜெண்ட்?

சார்ஜெண்ட் ஐயா, அது என்னுடைய தூக்கமின்மை வியாதியால்.

தலைவன் ஓ ... அப்படியா? சொல்லுங்கள் ... உமக்கு கனவுகள் வருகிறதா?

சார்ஜெண்ட் ஆமாம், சில நேரங்களில். ஆனால் மிகவும் அற்பத்தனமான கனவுகள்

தலைவன்: அவற்றைப் பற்றிச் சொல்லுமேன்.

சார்ஜெண்ட்: அடிக்கடி-அது ஏன் என்று தெரியவில்லை? என்னை மாதிரி இருவர் வருகிறார்கள் என கனவு காண்கிறேன்:

தலைவன்: சபாஷ்! சபாஷ்!!

சார்ஜெண்ட்: ஒருத்தர் சீருடையில். இன்னொருவர் சாதாரண உடையில். நாங்கள் ஒரு பெரிய வயலைக் கடந்து நடந்து கொண்டிருக்கிறோம். பறவைகள் பாடிக்கொண்டிருக்கின்றன. கதகதப்பாயிருக்கிறது. அப்பொழுது நான், அதாவது நாங்கள் இருவரும் அங்கே கண்காணா தூரத்திற்கு எடுத்துச் செல்லப்படுவது போல் உணர்கிறோம் ... வசந்தகாலத்திலிருப்பது போல் பசும்புல்லின் நறுமணம்... திடீரென்று எனக்கு ஒரு ஆசை பிறக்கிறது, யாரையாவது கைது செய்ய வேண்டுமென்று யாரையாவது... வளையில் பதுங்கும் முயலையோ சிறிய பறவையையோ ... அப்பொழுது நான், அதாவது நாங்கள் வயல் வெளியை சுற்றுமுற்றும் பார்க்கிறோம். கண்கள் வலியெடுத்ததுதான் மிச்சம் ... யாருமில்லை கைது செய்ய...

யாருமே இல்லை ... அப்பொழுது இந்தமெல்லிய பூமியில் நான் விழுகிறேன். தலையில் அடித்துக் கொண்டு அழுது கண்ணீர் விடுகிறேன். இப்பொது என்னுடைய கனவின் மிக மடத்தனமான பகுதி வருகிறது.

தலைவன் (மிகுந்த ஆவலுடன்) சொல்லும்! சொல்லும்!!

சார்ஜெண்ட் : என்னை நானே கைது செய்வதாக கனவு காண்கிறேன். அதாவது சீருடையில் இருப்பவர் சாதாரண ஆடையில் இருப்பவரை கைது செய்கிறார் ... திடீரென்று வியர்க்க வியர்க்க விழித்துக் கொண்டு விடுறேன் (கனவை கவனத்தோடு நினைவு கூர்ந்து சொன்னது பெரும் முயற்சி சார்ஜெண்டுக்கு. அதைச் சொல்லும் பொழுது அவர் உடற்பயிற்சி செய்வதில்லை)

தலைவன் சுவாரசியமாக இருக்கிறது. நீர் சொல்வது மிகவும் சுவாரசியமாக இருக்கிறது. இப்பொழுது சொல்லும் சார்ஜெண்ட் கடைசியாக நீர் கைது செய்தது எப்பொழுது?

சார்ஜெண்ட் : (கனத்த மனத்துடன் ஏக்கம் நிறைந்த குரலில்) ஓ கர்னல் ஐயா... அதை உங்களிடம் சொல்ல வெட்கப்படுகிறேன்

தலைவன் நான் சொல்வதை கவனமாகக் கேளும்.

சார்ஜெண்ட் : ஐயா!

தலைவன் : யாரையும் கைது செய்ய இனிமேல் நமக்கு சந்தர்ப்பம் எய்தாது என்பதை உணர்ந்தீரா?

சார்ஜெண்ட் : (கையில் இருக்கும் உடற்பயிற்சி குண்டு நழுவுகிறது) ஐயா, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

தலைவன் : (நாற்காலியிலிருந்து எழுந்திருக்கிறான் அறையைச் சுற்றி நடக்க ஆரம்பிக்கிறான்) சரி, அதை இப்படிச் சொல்கிறேன். நாம் இனி மேல் யாரையும் கைது செய்ய மாட்டோம். நாமென்ன, உம்முடைய பையன், பேரன், கொள்ளுப் பேரன் அவர்கள்கூட யாரையும் கைது செய்யமாட்டார்கள். மொத்த போலீஸ் படையும் மலையின் செங்குத்தான முகட்டில் நின்று கொண்டிருக்கிறது. பெரும் அழிவின் விளிம்பில் தள்ளாடிக் கொண்டிருக்கிறது. போலீஸ்காரனின் வேலை என்ன? நடைமுறை ஒழுங்கை குலைக்கும் மனிதனைக் கைது செய்வது. அந்தமாரி மனிதனே எஞ்சவில்லை என்று வைத்துக் கொள்வோம். சீரமைக்கப்பட்ட வளர்ச்சி அடைந்து விட்ட போலீஸ் செயல்பாடுகளின் விளைவால் போராடும் உணர்வின் கடைசிச் சுவடும் காணாமல் போய் விட்டது, மக்களும் இருக்கும் ஆட்சியை விரும்ப ஆரம்பித்து விட்டார்கள் என்று வைத்துக் கொள்வோம். குழந்தை ராஜாவையும் (எழுந்திருந்து விறைப்பான நிலையில் நின்று) மாமா தேசாதிபதியையும் நிரந்தரமாக

நேசிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அப்புறம் போலீஸ் செய்ய வேண்டிய வேலை என்னதான் இருக்கிறது? நானும் நிலைமைகளைச் சீரமைக்கப் பார்த்தேன்; மக்களைக் குறைகூற வை, சீண்டிவிடு என்று உனக்கு புத்திவேறு சொன்னேன் ஆனால் இந்த இறுதியான முயற்சிகூட ஒன்று மில்லாமல் போய்விட்டது. உம்மால் சீண்டத்தான் முடியவில்லை. போகட்டும். அரசாங்கத்தை குறைகூறி மக்களிடம் நீர் உதை வாங்கிக் கொண்டதுதான் மிச்சம்.

சார்ஜெண்ட்: அது ஒன்றுமில்லை. ஏற்கனவே அது ஆறிவிட்டது.,

தலைவன்: அது விஷயமில்லை. நாம் பொதுவான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம். இப்பொழுது அடைந்துள்ள நிலையைப் பற்றி ஏற்கனவே நான் எதிர்பார்த்து அச்சங்கொண்டிருந்தேன். நம் முடைய கடைசி அரசியல் கைதியும் மன்னிப்பு கடிதத்தை எழுதிக் கொடுத்து விட்டான். சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டு விட்டான். குழந்தை ராஜாவுக்கும், மாமா தேசாதிபதிக்கும் சேவை செய்ய ஆரம்பித்து விட்டான். நானும் அவனைத் தக்கவைக்க முயற்சி செய்தேன். சேக ரிக்க நிறைய தபால்தலைகள் தருவேன் என வாக்குறுதி அளித்தேன். ஒன்றும் பலனளிக்கவில்லை. இதற்கு என்ன அர்த்தம் என்று புரிகிறதா? மிகுந்த பொருட்செலவில் கட்டப்பெற்ற, அழகான சிறைச்சாலைகள் நம் மிடமிருக்கின்றன. சீரிய பயிற்சிகளை முடித்த, கடமை உணர்வுமிக்க அலுவலர்கள், நீதிமன்றங்கள், அலுவலகங்கள். குறிப்பட்டைகள் இருக் கின்றன. ஒரு; ஒரே ஒரு கைதிகூட இல்லை. சந்தேக வழக்கில் சிக்க ஒரு ஆள்கூட இல்லை. பின்னாலேயே தொடர்ந்து செல்ல ஒரு ஆள்கூட இல்லை. மக்கள் பயங்கரமான, கொடூரமான மிருகத்தனமான விசுவாசி களாக மாறிவிட்டார்கள்,

சார்ஜெண்ட்: அது நிஜந்தான் கர்னல் ஐயா! அது உண்மைதான். நான்...

தலைவன்: நம்முடைய சீருடைகளை கழற்றி எறிய வேண்டிய நேரம் விரை வில் வந்துவிடும். அப்பொழுது சின்ன விசாரணைக்காக ஏங்கி நீர் நம்பிக் கையிழந்து படுக்கையில் இரவு பகல் உருண்டு கொண்டிருப்பீர். நீர் சட்டையில் தைத்துக் கொண்டிருக்கும் பதக்கங்கள் ஒன்றுக்கும் உதவாது. நீர் தூக்கமில்லாமல் அவஸ்தைப்படும் இந்த வேளையில், வேலையாவது இருக்கிறது. சீக்கிரம் என்ன நடக்கப் போகிறது என்று நினைத்துப் பாரும்.

சார்ஜெண்ட்: ஐயா ... வேண்டாம்... வேண்டாம்...

தலைவன்: ஆமாம் .. ஆமாம் .. உம்முடைய சீருடையை எடுத்துக்கொண்டு விடுவார்கள். விளையாட்டு மேலங்கி, நடப்பதற்கான சாதாரண ஜோடு.

ஒரு ஜோடி கம்பளித் துணிகளைக் கொடுப்பார்கள். நீர் வயல்களுக்குத் தான் போக முடியும். இல்லாவிட்டால் தூண்டிலையோ நீர் விருப்பப்பட்டால் துப்பாக்கியையோ எடுத்துக்கொண்டு ஏரியைப் பார்க்கப் போக வேண்டியதுதான். ஓய்வு நேரத்தை உம்முடைய இஷ்டப்படி கழிக்கலாம். கூடும் காலமாக இல்லாமலிருந்தால் முயல்களையும் சிட்டுக்குருவிகளையும் உம்மால் கைது செய்ய முடியும்.

சார்ஜெண்ட் : நாம் வேறு ஒன்றும் செய்ய முடியாதா ஐயா !

தலைவன் : (அவனுடைய தோளில் வாத்சல்யத்துடன் கையைப் போட்டு, ஆதரவோடு) போலீஸ் தலைவர், உயர் அதிகாரி என்ற ஹோதாவில் உம்மிடம் வரவில்லை நான். இந்த பயங்கரமான நேரத்தில் நாமிருவரும் சாதாரண போலீஸ் காவலர்களே. நம் வாழ்க்கைக்கு அழிவு வந்து விட்ட நேரத்தில் நாம் ஒருவர்க்கொருவர் கையைப் பற்றிக் கொள்வோம். ஒருவர்க்கொருவர் சகோதர முறையில் அறிவுரை கொடுத்துக் கொள்வோம். (சார்ஜெண்டிற்கு கை கொடுக்கிறான். கலங்கிப் போயிருப்பவர் கையை நசுக்குகிறார், இடது கையால், வழியும் ஒற்றைக் கண்ணீர்த் துளியை துடைத்துக்கொண்டு) இப்பொழுது நான் சொல்வதைக் கேளும். இந்த நிலைமையை ஒழுங்காக சமாளிக்கத் தெரிந்த ஒரே ஆள் நீர்தான்.

சார்ஜெண்ட் : நானா ?

தலைவன் : ஆமாம்! நீர்தான். நான் சொல்வதை கவனமாகக் கேளும், நமக்கு என்ன தேவை ? கொட்டடியில் அடைக்க ஒரே ஒரு ஆள். அரசாங்கத்திற்கு எதிராக சிறிதாவது எதிர்த்துப் பேசக்கூடிய ஆள் என்று வர்ணிக்கத்தகுந்த ஒரு ஆள், பலமுறை முயன்றும் அப்படி ஒருவன் நமக்குக் கிட்டவில்லை. இதற்கான வழிகளில் தேடினால் இப்படி ஒரு ஆள் கிடைக்க மாட்டான் என்பது தெளிவாகி விட்டது. ஆகவே அந்த மனிதனை நாமே ஆக்கவேண்டும். நான் உம்மையே தேர்ந்தெடுக்கிறேன்.

சார்ஜெண்ட் : எனக்குப் புரியவில்லை ஐயா !

தலைவன் : உமக்கு என்ன புரியவில்லை ?

சார்ஜெண்ட் : நான் என்ன செய்ய வேண்டும் ?

தலைவன் : இவ்வளவு நாளாக நீர் என்ன செய்து வந்தீரோ அதையே செய்யும் அரசாங்கத்திற்கு எதிராக எதையாவது கத்தும். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம். இந்த தடவை உன்னை விட்டுவிட மாட்டோம்; நாங்கள் உம்மை கொட்டடியில் அடைத்து வைப்போம்.

தலைவன் : என்னையா ?

தலைவர் : நீர் நிறைவேற்ற வேண்டிய இந்தப் பெருஞ்செயல். ஒரு வயதான குடிமகனை அரசாங்கத்தைக் குறைகூறும்படி சீண்டி அவனைக்

கைது செய்வதைவிட இந்த செயல் போலீஸ் அறநிலை என்ற பார்வையில் நாம் பார்ப்பதைவிட சிறந்தது என்பதை உறுதிப்படுத்துகிறேன். இது நீர் தினம் ஆற்ற வேண்டிய கடமை போலத்தான். செய்து தீர வேண்டிய செயல் ஒன்று இருக்கிறது. அது போலீஸ்காரனுக்காகவே ஏற்பட்ட ஒன்று. சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற, எழுச்சியூட்டப் பெற்ற, உடலில் போலீஸ் சக்தி ஆழப்பாய்ந்துள்ள போலீஸ்காரனுக்காகவே ஏற்பட்ட ஒன்று. போலீஸ் பயிற்சிக்களத்தில் உம்மைப் பார்த்தவுடன் என் மனதில் இது உறைத்தது. உடனே சொல்ல நினைத்தேன். உம்மிடத்தில் ஏதோ ஒன்று வெளியாக வழி இல்லை. ஏதோ ஒரு கட்டளைக்காக அது ஆவலோடு காத்துக் கொண்டிருக்கிறது அதை நான் வெளிப்படையாகவே சொல்கிறேன். நமது சார்ஜெண்டுகளின் விமோசனத்திற்காகவே மாபெரும் மனிதனாக இந்தப் பூமியில் நீர் இருக்கப் போகிறவர்.

சார்ஜெண்ட்: கர்னல் ஐயா! நிச்சயமாக இருப்பேன். எது வேண்டுமானாலும் செய்கிறேன். ஆனால் இப்பொழுது தலை வலிக்கிறது.

தலைவன்: அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். சாதாரண உடைகளை அணிந்துகொள்ளும்.

சார்ஜெண்ட்: என்ன? மீண்டுமா? எதற்காக?

தலைவன்; சீருடை அணிந்துகொண்டு உம்மையே நீர் சீண்டிக்கொள்ள முடியும்.

சார்ஜெண்ட்: மிகவும் சரி! மாற்றிக் கொள்ளட்டுமா இப்பொழுதே!

தலைவன்: ஆமாம், வீணடிக்க நேரமில்லை. நீர் மாற்றிக் கொண்டு விட்டால் நாம் ஜன்னல் கதவைத் திறப்போம். அப்பொழுதுதான் நீர் கத்துவதை அவர்கள் வீதியிலிருந்து நன்றாகக் கேட்க முடியும்! நீர் ஜன்னலருகே நின்று உம்மால் முடிந்த மட்டும் உரத்த குரலில் குழந்தை ராஜா, தேசாதிபதி மாமாவுக்கு (இருவரும் எழுந்து நிற்கின்றனர்) எதிராக ஏதாவது கத்தி தீரும். அப்போழுது நான் உறையிலிருந்து வாளை உருவி உம்மைக் கைது செய்வேன். அவ்வளவுதான்.

சார்ஜெண்ட்: ஆண்டவனே! ஆனால் நான் ஒரு போலீகாரனாயிற்றே!

தலைவன்: இந்த உலகில் எல்லாரையும் போல அல்ல ஒரு போலீஸ்காரன். போலீஸ் படையில் இருந்துகொண்டு நீர் போலீஸ் இல்லை என்று பிறரிடம் பாசாங்கு செய்வது உம்மை ஒரு இரட்டை போலிஸ்காரனாக்குகிறது. ஆனால் போலீஸ்காரனாக இருந்துகொண்டு உமக்கு நீரே போலீஸ்காரனில்லை என்று பாசாங்கு செய்தால் இதயத்திற்குள், அதன் ஆழத்தில் சொகுசாக உம்மைப் போலீஸ்காரனாக்குகிறது. நான் உன்னை ஒரு சூப்பர்

அங்கம் 1 ல் உள்ளபடி போலீஸ் தலைவனின் அலுவலகம். ஒரு போலீஸ்காரன் ஒரு மலர்மாலையை ஆணியில் அடித்து மாட்ட முயற்சி செய்து கொண்டிருக்கின்றான். ஜெனரலை வரவேற்பதற்கான ஏற்பாடுகளுக்கான அலங்காரத்தில் மூழ்கிபிருக்கிறான். போலீஸ் தலைவனும் சார்ஜெண்ட்டும் எதிரும் புதிருமாக அமர்ந்திருக்கின்றனர். தலைவர் மர சாய்வு மேஜைக்குப் பின்னால். சார்ஜெண்ட் கைதி இருந்த இடத்தில், முதல் அங்கப்படி.

தலைவன் : ஆக, சிறை ஜன்னலின் வழியாக எட்டிப் பார்க்க முயற்சித்தீர். ஒரு ஜெயில் வார்டனை உதைத்துத் தள்ளினீர். இரண்டாவது முறையாக இப்படி நடந்துள்ளது.

சார்ஜெண்ட் : எனக்கு என்ன ஆகிவிட்டது என்று உண்மையாக விளங்கவில்லை கர்னல்.

தலைவன் : உமக்கு ஏதும் தேவையா?

சார்ஜெண்ட் : (துயரத்தோடு) இல்லை. மிக்க நன்றி!

தலைவன் : இருந்தாலும் உம்மைப் பார்த்தால் ஏகப்பட்ட தேவைகளோடு உள்ளவர்போல் தோன்றுகிறது. நீர் மிகுந்த மௌனத்தோடு, வெளிறிப் போயிருக்கிறீர்.

சார்ஜெண்ட் : சிறையில் அடைபட்டுக் கிடப்பதால் இருக்கலாம் ஐயா!

தலைவன் : ஒவ்வொரு நாளும் உம்மைப்பற்றி ஜெனரலுக்கு அறிக்கை அனுப்பிக் கொண்டிருக்கிறேன். சிறைகளைச் சீரமைத்துக் கட்டவும், புது அலுவலர்களை பணியில் அமர்த்தவும், கண்காணிப்புகளை வலுப்படுத்தவும் மானியம் வழங்கப்பட்டுள்ளது. அதற்கு உமக்கு நன்றி. உமது வழக்கில் ஜெனரல் தனிப்பட்ட கவனம் செலுத்தி வருகிறார். நீர் மிகவும் பயங்கரமான ஆசாமி என்றும் நீர் சரியான நேரத்தில் பிடிபட்டது மிகுந்த அதிர்ஷ்டம் என்றும் அவர் சொல்கிறார் (சார்ஜெண்ட் தோளை உயர்த்தி 'ஒன்றும் புரியவில்லை' என்கிற மாதிரி ஆட்டுகிறார்) மக்குத்தனமாகப் பார்க்காதீர். உம்மை எனக்குத் தெரிந்திராவிட்டால் நானும் உமக்கு இதில் மகிழ்ந்துபோக ஏதுமில்லை என எண்ணியிருப்பேன். உம்மை விசாரிக்க தானே நேரில் வருவதாக ஜெனரல் கூறியுள்ளார்.

சார்ஜெண்ட் : அவர்—அவர்—அவர்.

தலைவன் : உமக்கு என்ன உடம்பு சரியில்லையா? நீர் என்ன சரியாகத் தூங்குவதில்லையா?

சார்ஜெண்ட் : அவ்வளவு சரியாக இல்லை.

தலைவன் : கனவுகள் ஏதாவது காண்பதுண்டா?

சார்ஜெண்ட் : அவ்வப்பொழுது,

தலைவன் : என்ன கனவுகள்?

சார்ஜெண்ட் : ஒரு பெரிய வயல் வெளியில் நடந்து போதாகக் கனவு காண்கிறேன்.

தலைவன் : அங்கே பறவைகள் பாடும். இல்லையா?

சார்ஜெண்ட் : உங்களுக்கு எப்படித் தெரியும் இதெல்லாம்?

தலைவன் : சீருடை உடுத்தியிருப்பீரா, இல்லாவிட்டால் சாதாரண உடையா?

சார்ஜெண்ட் : சாதாரண உடை! மேல் கோட்டு சற்று மிருதுவான மிருக ரோமத்துடன்.

தலைவன் : அப்புறம் மீதி?

சார்ஜெண்ட் : மேலே பார்த்தபடி, நான் போய்க்கொண்டே இருக்கிறேன். அங்கே ஒரு மரம் இருக்கிறது. அப்புறம், ஐயா, அந்த மரத்தடியில் பாலேட்டை விழுங்கியபடி நீங்கள் உட்கார்திருக்கிறீர்கள்.

தலைவன் : நான் உட்கார்ந்திருக்கிறேன். பாலேட்டை விழுங்கியபடி.

சார்ஜெண்ட் : ஆமாம். நான் மரத்தினடியில் நின்று கொண்டிருக்கிறேன். என்னைக் கைது செய்ய நீங்கள் உங்கள் வாயைத் திறக்கிறீர்கள். உங்கள் வாயிலிருந்து பாலேடு தரையில் விழுந்துவிடுகிறது.

தலைவன் : நீர் அதை எடுத்துக் கொள்கிறீர்?

சார்ஜெண்ட் : இல்லை. இந்த Gorgonzola பாலேடு எனக்குப் பிடிப்பதே இல்லை.

தலைவன் : (மகிழ்ச்சியற்று) மகா முட்டாள்தனமான கனவு.

சார்ஜெண்ட் : ஆமாம் கர்னல்.

தலைவன் : ஏதாவது அருந்துகிறீரா? (பதிலுக்குக் காத்திராமல் கடுமை யான நிலையைப் போக்க வேண்டி மேஜயின் கீழ் குனிந்து பீர் பாட்டில் களையும் கண்ணாடித் தம்ளர்களையும் எடுக்கிறான். ஊற்றுகிறான்.)

சார்ஜெண்ட் : நன்றி. (குடிக்கிறான். திடீரென தம்ளரை கீழே வைக்கிறான்.) இல்லை கர்னல், இல்லை. உண்மையில் உங்களோடு நான் அருந்தக் கூடாது.

தலைவன் : ஏன்?

சார்ஜெண்ட் : ஏன் என்றால் நான் சாமானியன். கர்னல், உங்களால் சொல்ல முடியுமா நான் யார்?

தலைவன் : இதென்ன கேள்வி? நீர் நீர்தான்.

சார்ஜெண்ட் : இப்பொழுது நான் யார்? போலீஸ்காரனா, கைதியா? போலீஸ்காரன் என்றால் நான் நான்தானா? இல்லை கைதி என்றால்

நான் நான்தானா? நான் நானாகவே இருக்கும்பொழுது நான் போலீஸ் காரனா இல்லை கைதியா?

**தலைவன் :** உம்மைக் கைது செய்யும்பொழுது எல்லாவற்றையும் விளக்கி னேன். ஏன் மீண்டும் இதையெல்லாம் கிளறுகிறீர்?

**சார்ஜெண்ட் :** அப்பொழுது எல்லாம் தெளிவாக இருந்தது. அது ஆரம்பக் காலம். ரகசியப் போலிஸ் பணியில் நான் ஒரு சாதாரணப் போலீஸ் காரன் என நன்றாகவே அறிந்திருந்தேன். எல்லாரையும் சீண்டும் இடைத்தரகனாக நான் ஆன காலத்தில் எல்லாம் வீணாகிப் போனது. தயவு செய்து சினம் கொள்ள வேண்டாம், அந்தக் காலத்தில் இப்பொழுது மாதிரி இவையெல்லாம் புரிந்திருந்தால், இந்த சீண்டும், தூண்டும் வேலைக்கு வேறு ஆள் பார்த்துக் கொள்ளுங்கள் என்று உங்களிடம் கூறி இருப்பேன். சாதாரண உடைகளை அணிகிறபொழுது நான் அடைந்த வருத்தம். அதை சாதாரணம் என ஒதுக்க முடியாது. எந்தத் தருணத் திலும், நிலைமையிலும் ஒரு போலீஸ்காரன் தன் சீருடைகளைக் கீழே எறிந்துவிடக் கூடாது.

**தலைவன் :** இருந்தபொழுதும் முறையீடு செய்ய உமக்குத் தோன்றவில்லை. பணிமுடிந்தபொழுதுகூட நீராகவே பணியைத் தொடரக் கிளம்பினீர்.

**சார்ஜெண்ட் :** ஆனால், ஐயா, இப்பொழுதுபோல் அவ்வளவு மோசமாக இல்லை. அப்பொழுது, எனக்கும் ஒரு சிறிய எண்ணம்கூட இல்லை ஐயா. நீங்களே என் வீட்டிற்கு வந்திருந்தபொழுது எனக்குப் பொன் னான எதிர்காலம் இருக்கிறது என்றெல்லாம் பேசியபொழுது நான் ஹெர்குலிசை நினைவுபடுத்துகிறேன் என்று சொல்லியபொழுது எனக்கு மிக அதிர்ச்சியாகத்தானிருந்தது. நீங்கள் சொன்னவாறே ஒரு முதல்தர போலீஸ்காரனாக, மற்றவர்களைவிட சிறந்தவனாக இருந்தேன். நீங்கள் என்னைக் கைது செய்து, நான் சிறையில் என் நேரத்தைக் கழிக்க ஆரம் பித்தபொழுதுதான் எல்லாம் வியர்த்தம் என உணர்ந்தேன். சிறை மனிதன் மீது பயங்கரமான பாதிப்பை உண்டாக்குகிறது. நான் கைது செய்யப்பட்ட நேரத்திலிருந்து எல்லாம் மேலும் மேலும் குழம்பிப்போக ஆரம்பித்தது.

**தலைவன் :** என்ன சொல்கிறீர் நீர்?

**சார்ஜெண்ட் :** நல்லது ஐயா! நீங்கள் விளக்கியவையெல்லாம் நினைவிற்கு வந்தது. பிறகு மனதில் தாக்குதல்களும் இருட்டடிப்புகளும் நிகழ்ந்தன. நான் மிகவும் துணுக்குற்றேன். எனக்குள்ளேயே திரும்பவும் திரும்பவும் சொல்லிக் கொண்டேன், ''ரகசிய போலீஸ் பணியில் நான் ஒரு சார் ஜெண்ட். ரகசிய போலீஸ் பணியில் நான் ஒரு சார்ஜெண்ட். போலீஸ் பணியில், போலீஸ் உயர் பணியில்'' பிறகு...

தலைவன் : பிறகு என்ன நடந்தது ?

சார்ஜெண்ட் : திரும்பத் திரும்ப அதைச் சொல்வதை நிறுத்தினேன். அதில் ஒன்றும் பொருள் இல்லை என அறித்தேன். இருந்தாலும் நான் அறிந்தது, நான் ஒரு சாதாரண ... ...

தலைவன் : ஒரு சாதாரண ... சொல்லித் தொலையும்

சார்ஜெண்ட் : நான் ஒரு சாதாரண போலீஸ்காரன்... சாதாரண கைதி. இருவரில் எவராக இருந்தாலும் ... சாதாரணன்.

தலைவன் : முட்டாள்தனமான, சிறுபிள்ளைத்தனமான வாதங்களை ஏன் முன் வைக்கிறீர் ? பெரிய படிப்பு படிக்காதவர்களுக்கு பொறுப்பான வேலையை ஒப்படைக்கும்பொழுது இப்படித்தான் நடக்கும். உம்முடைய இடத்தில் ஒரு புத்திசாலி மனிதன் ...

சார்ஜெண்ட் : நான் சொல்லவருவது என்னவென்றால் இருவரில் எவராக் இருந்தாலும் நான் உம்முடன் மது அருந்தக் கூடாது அய்யா. நான் போலீஸ்காரன் என்று வைத்துக் கொண்டால் தாங்கள் ஒரு கைதியுடன் அருந்துவதை மன்னிக்க முடியாது ... என்னுடன் அருந்துவதை ... ஏனென்றால் நான் கைது செய்யப்பட்டு நிற்கிறேன். நான் ஜெனரலே கண்டு நடுங்கும் கைதி. ஒரு நாட்டின் அரசாங்கத்தோடு போராடும் புரட்சியாளன் என்றால் அப்பொழுதும் நான் அருந்தக்கூடாது.

தலைவன் : ஏன் ?

சார்ஜெண்ட் : ஏனென்றால் நான் ஒரு கைதி. சிறை செய்யப்பட்டுள்ள புரட்சியாளனுக்கு விதிக்கப்பட்டுள்ள சட்டப்படி போலீஸ் தலைவர்—ஒரு அதிகாரப் பிரதிநிதி—கைதியோடு அருந்துவது கூடாது.

தலைவன் : உமக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா ?

சார்ஜெண்ட் . இல்லை கர்னல். என்னைவிடப் பலம் வாய்ந்த என்னுடைய 'நான்' வெளிப்பட்டுள்ளது. என்னைச் சிறையிலிருந்து விடுதலைசெய்ய தங்களால் இயலுமா ? இயலாது. உங்களால் இயலாது. ஆக. நான் இங்கு தங்கியே ஆக வேண்டும். நான் சிறையில் தங்குவது நீடிக்க நீடிக்க அந்தச் சிறைச் சூழ்நிலையின் பாதிப்பு என்மேல் அதிகமாக அதிகமாக சிறையில் நான் கழிக்கும் ஒவ்வொரு நாளும் எனக்கு பயங்கரமான ஒன்றை—எனக்கு விளங்காத ஒன்றைச் செய்கிறது.

தலைவன் : உமக்கு உடம்பு சரியாயில்லை. உம்முடைய சுவாசப் பைக்கு எப்பொழுதாவது கோளாறு வந்திருக்கிறதா ?

சார்ஜெண்ட் : இல்லை கர்னல். இல்லவே இல்லை. எப்பொழுதையும் விட மிகவும் ஆரோக்கியமாக இருக்கிறேன். நான் உடற்பயிற்சி செய்வதைத் தான் நீங்கள் பார்த்தீர்களே ! நீங்கள் கூட உடற்பயிற்சி செய்ய

வேண்டும் என்று விருப்பப்படுபவன் நான். நீங்கள் என்னைக் கைது செய்த நேரத்திலிருந்து சில புதிய சிந்தனைகளோடு சீராட ஆரம்பித்து விட்டேன் என்பதை நீங்கள் அறிவீர்களா ?

தலைவன் : சொல்வதை அளந்து சொல்லும்.

சார்ஜெண்ட்: இல்லை ஐயா நீங்களும் அதை அறிந்துகொள்ள வேண்டும் என்று நினைக்கிறேன் உதாரணத்திற்கு, இதற்குமுன் ரயிலில் பலமுறை பிரயாணம் செய்திருக்கிறேன் ஆனால் அதைப்பற்றி குறிப்பாக ஏதும் சிந்தித்துப் பார்த்ததில்லை. ஒரு மனிதன் சிறையிலடைக்கப்படும்பொழுது தான் அவன் எதையும் மிகமிகச் சீரியமுறையில் சிந்தித்து, விமர்சித்துப் பார்க்கிறான். நான் என்ன முடிவுக்கு வந்திருக்கிறேன் தெரியுமா?

தலைவன் : எனக்கு எப்படித் தெரியும்? உடனே சொல்லும்!

சார்ஜெண்ட் : நம்முடைய ரயில்வே மிகவும் அக்கிரமமானது!

தலைவன் : நீர் என்ன சொல்கிறீர் என அறிந்துதான் சொல்கிறீரா? இதை நான் முறையிட வேண்டிவரும்

சார்ஜெண்ட் : முறையிடுங்கள், ஐயா, தயவு செய்து முறையிடுங்கள். இதைப் போன்ற விஷயங்கள் மனித உள்ளத்தை உலுக்கிக் கொண்டே இருக் கின்றன. அதனால் அவன் வாய்மூடி மௌனியாக இருக்கமுடியாது. சொல்லுங்கள் கர்னல். ஏன் நாம் கொடுமை செய்து,சித்திரவதை செய்ய வேண்டும் இந்த பாவப்பட்ட கலைஞர்களை?

தலைவன் (வேகமாக எழுதியபடி) மெதுவாக. தயவுசெய்து மெதுவாக. அந்தக் கடைசி இரண்டு வார்த்தைகள் என்ன?

சார்ஜெண்ட் : 'பாவப்பட்ட கலைஞர்களை' என்று சொன்னேன்

தலைவன் ... கலைஞர்களை ... ரைட் (எழுதும் பேப்பரிலிருந்து பார்வையை நகர்த்தி,எழுதுவதை நிறுத்தி) நான் நம்பமாட்டேன். நாணயமான சேவை யாற்றிவிட்டு நீரா இந்தமாதிரிக் கருத்துக்களைக் கொண்டிருக்கிறீர்? பல வருஷங்கள் நாம் சேர்ந்து வேலைசெய்தோம்.எல்லாம் அமைதியாக சீராகச் சென்றது. எப்பொழுதும் நீர்... இந்த அளவுக்கு நாட்டில் விஷயங்கள் மிக மோசமாக உள்ளன என்று நீர் நினைக்கிறீரா? உண்மையில் எண்ணிப் பாரும்.

சார்ஜெண்ட் : எண்ணிப்பார்க்க என்ன இருக்கிறது? கேளுங்கள், என் மரக்கட் டைப் படுக்கையை நகர்த்தி அதன் மேல் வாளியை வைத்து சிறை ஜன்னல் வழியாகப் பார்க்கிறேன் அங்கொரு வயல் தெரிகிறது. வயல் முழுவதும் உழவர்கள். அறுவடைக் காலம். அவர்களை அணுகி ஆராய்ந்து பார்த்தால்? அது உங்களாலும் இயலும் என்பது என் எண்ணம்—அவர்கள் முகத்தில் சோகச் சித்திரங்கள். பொது அதிருப்தி அதில் பளிச்சென எழுதப் பட்டிருக்கிறது.

லைவன் : உணர்ச்சிகள் பொங்கும் மனத்தின் பார்வை இது. அவர்கள் விசுவாசிகளா இல்லையா என்ற எந்த முடிவு எடுக்கவும் இது துணை செய்யாது. நம் மனதில் எழுகின்றவை கட்சியின் நிகழ்ச்சி நிரலுக்கு எதிரானவை. அதிருப்தி என்ற வார்த்தை கிடக்கட்டும். அதை நீர் குறிப் பிடாவிட்டால்கூட என்னால் உமக்கு தண்டனையளிக்கமுடியும். மேலும், ஜன்னல் வழியே எட்டிப்பார்ப்பது சட்டங்களுக்கு எதிரானது.

ார்ஜெண்ட் : ஆனால் அரசாங்கத்தை எதிர்த்துப் போராடும் சிலருக்கு இந்தச் சட்டம் செல்லாது கர்னல். பெரும் கலகத்தையே 'பூ' என ஊதும் சிலருக்கு... போராட்டத்தில் ஏற்படும் திருப்தியைவிட அதை அவன் பூர்த்தி செய்வதே நோக்கமாக இருக்கும். ஒரு விஷயம். ஜன்னலிலிருந்து எட்டிப் பார்க்கும் பொழுது வயலுக்கு அப்பால் புதிதாகக்கட்டப் பெற்ற மின் சுடுகாடு கண்ணில் பட்டது. அது என் சிந்தனையைக் கிளறியது. உற்பத்தி யற்ற மூலதனம்.

தலைவன் : இறந்தவர்களின் உடலை எரிக்க, அவர்கள் விருப்பப்படி எரிக்க, நாஸ்திகர்களின் உரிமையை நீங்கள் மறுக்கமுடியுமா? மதச்சகிப்பின்மை கூடஇல்லாமல் அரசாங்கத்தின் கொள்கைகளை நீர் எப்படி விமர்சிக்க முடியும்?

சார்ஜெண்ட் : அவர்கள் இறந்து போனவர்கள். ஆகையால் உங்கள் விவாதம் பிரயோஜனமற்றது. ஜன்னல் வழியாகப் பார்க்காவிட்டால்கூட என் சிறை அறையில் செதுக்கப்பட்டுள்ள எழுத்துகளை என்னால் பார்க்க இயலும். சிறையில் அமர்ந்து ஒன்றும் செய்ய இயலாதவன் இவற்றைப்படிக்கிறான். எழுத்துக்களில் சில சிந்தனையைக் கிளறுகின்றன. அவை அவ்வளவு முட்டாள்தனமாக இல்லை.

தலைவன் : உதாரணத்திற்கு ஒன்று சொல்லும்

சார்ஜெண்ட் : ''கொடுங்கோன்மை ஒழிக"

தலைவன் : ஆக, இவை இப்படித்தானிருக்கின்றன. அவை அந்த நிலையை அடைந்து விட்டன. நம் தேசாதிபதி (விறைப்பாக நிற்கிறார்) அதாவது நம்குழந்தை ராஜாவின் மாமா (சார்ஜெண்ட் எழுந்திருப்பதில்லை) ஒரு முட்டாள் என எண்ணுகிறேன்

சார்ஜெண்ட் : (துயரமாக) அப்படித்தான் என நான் நினைக்கிறேன் கர்னல்.

தலைவன் : நம் குழந்தை ராஜா குண்டி சிறுத்தபயல் என நினைக்கிறேன்.

சார்ஜெண்ட் : அப்படித்தான் என நான் நினைக்கிறேன் கர்னல்.

தலைவன் : (கோபத்தால் வெகுண்டு) ஆங்... (ஒரு போலீஸ்காரன் இவ்வளவு நேரமும் சுற்றி வருகிறான் சம்பாஷணைக்கு இடையூறில்லாமல். ஒரு கிறிஸ்துமஸ் மரத்தை கையில் ஏந்தியுள்ளான். அதன்மேல் ஒரு மாலை.

அறையை விட்டு நீங்கி திரும்பிவருகிறான். எல்லாம் மிகவும் புத்திகூர்மை யோடு நடக்கிறது. இந்த நேரம் அறைக்குள் நுழைகிறான்)

போலீஸ்காரன் : ஐயா, ஜெனரல் வந்துவிட்டார் ஐயா. (தலைவர் தம்ளரை வைத்து விட்டு சீருடையை சரி செய்து கொண்டு ஓடுகிறார். சிறிது நேரம் சென்று முன்னாள் கைதி (புரட்சியாளன்) தனிப் பாதுகாவலன் உடையில் நுழைகிறான், தாடி இல்லை. போலீஸ்காரன் மீசை உள்ளது. கதவின் நுழைவுப் பகுதியில் விறைப்பான நிலையில் அவையோர்களைப் பார்த்தபடி நிற்கிறான். ஜெனரல் அந்த வழியாக வரப்போகிறார். தலைவரும் போலீஸ்காரரும் விறைப்பு நிலையில். சார்ஜெண்ட் அரைமனதோடு எழுந்திருக்கிறான். ஜெனரல் வருகிறார், மிடுக்காக. மீசையோடு. சார்ஜெண்ட்டின் முன்னால் சென்று அவனை ஆராய்கிறார்.

ஜெனரல் : ஆக, இவன்தான் அந்த ஆள்.

தலைவன் : எஸ் சார், இவன்தான்.

ஜெனரல் : இவன்தான் அந்த கும்பலின் தலைவன் போலத் தெரிகிறான். கும்பலின் மீதி ஆட்களைப் பிடிக்க முயற்சித்தீரா?

தலைவன் : இன்னும் இல்லை. முறைப்படி விசாரித்துக் கொண்டிருக்கிறோம்.

ஜெனரல் : இது கொடிய பறவை. இவனிடமிருந்து ஏதாவது வெடிமருந்துப் பொருட்களை கைப்பற்றினீர்களா?

தலைவன் : இன்னும் இல்லை. ஆனால் நம்பிக்கை இழந்துவிடவில்லை.

ஜெனரல் ; (ஒரு விசில் கொடுக்கிறான்) ஹூம்... நான் நினைத்ததைவிட பயங்கரமானவன், நாணயமற்றவன். நல்லது. நேர்மையான புரட்சியாளர்கள் தங்களிடம் ரெண்டுபவுண்டு டைனமைட் வைத்திருக்கிறார்கள். எனக்கென்னவோ நாம் முக்கியமான ஆளைப்பிடித்து விட்டோம் எனத் தோன்றுகிறது. நீர் என்ன நினைக்கிறீர் லெப்டினெட்.

தனிப்பாதுகாவலன் : உங்களோடு ஒத்துப்போகிறேன் சார். இவனிடம் சோதனை செய்து ஏதேனும் கிடைக்கவில்லை என்றாலும் இன்னும் நம் கண்ணுக்கு மறைந்து கிடப்பது ஏராளம் எனத் தோன்றுகிறது.

ஜெனரல் : கர்னல், என்னுடைய தனிப்பாதுகாவலனை அறிமுகப்படுத்துகிறேன். அரசாங்கத்திற்கு எதிரான செயல்கள் புரட்சி விஷயங்கள் இதில் எனக்கு சிறப்பு ஆலோசகராக இவரை தேர்ந்தெடுத்துள்ளேன். இவர் இந்த விஷயத்தில் கெட்டிக்காரர்.

தலைவன் : ஐயா, அது அப்படி இருக்க முடியாது ஐயா.

ஜெனரல் : உமக்கு என்ன நேர்ந்து விட்டது.

தலைவன் : மேன்மை தங்கியவரே! என்னைப் பேச அனுமதியுங்கள். ஒரு தவறுக்கு இரையாகிவிட்டீர்கள். இல்லாவிட்டால் இது ஒரு பெரிய

ஏமாற்று வேலை. இந்த ஆள்...

ஜெனரல்: சொல்லும். இந்த ஆள்...

தலைவன்: உங்கள் மீது குண்டு வீசியவன் இவன்தான் ஐயா.

ஜெனரல்: யார்?

தலைவன்: உங்களுடைய இந்தநாள் உதவியாளன், அந்த நாள் புரட்சியாளன்.

ஜெனரல்: சொல்லும், கர்னல், தயவு செய்து தொடர்ந்து சொல்லும்.

தலைவன்: சத்தியமாகச் சொல்லுகிறேன்! என்னைத் தவறாக எண்ண வேண்டாம். இவனை எனக்கு நன்றாகத் தெரியும். பத்து வருடங்கள், இங்கே, இதே ஆபிஸில் இதே நாற்காலியில் இவனை விசாரித்தேன். மேன்மைதாங்கிய உங்களுக்கு இதைப் போன்ற ஆள் உதவியாளனாக இருக்கமுடியாது.

ஜெனரல்: லெப்டினெண்ட், நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

தனிப்பாதுகாவலன்: கர்னல் சொல்வது மிகவும் சரி. நான் அவருடைய முன்னாள் கைதி. என்னை இந்தச் சீருடையில், புதுவிதமான அலங்காரத்தில் அவர் அடையாளம் கண்டு கொண்டது அவருடைய கண்காணிப்புக்கும், தொழில் திறமைக்கும் பெரிய பாராட்டுதலாகும்,

தலைவன்: ஆனால், துடுக்கான நீர்...

தனிப்பாதுகாவலன்: நிஜத்தில் நான் உங்கள் முன்னாள் கைதி. ஆனால் நான் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்ததையும்' விடுதலை அடைந்து விட்டதையும் நீங்கள் மறந்துவிட்டீர்கள். His Excellencyக்கும் இது நன்றாகவே தெரியும்.

ஜெனரல்: அமைதியாக இரும் கர்னல். எனக்கு இதெல்லாம் தெரியும். ஆனால் லெப்டினெண்ட்டை இந்த மாதிரி கீழ்த்தர செயல்களைக் கண்காணிக்கும் நிபுணராக நியமித்ததில் நியாயம் இல்லாமல் இல்லை.

தலைவர்: ஆனால் அந்த வெடிகுண்டு... அந்த குண்டு இன்னும் மேஜை டிராயரில் கிடக்கிறது.

ஜெனரல்: மை டியர் கர்னல். ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு சமயத்தில் ஜெனரல் மீதோ இல்லை வேறு யாரு மீதோ குண்டை எறிய வேண்டியுள்ளது. உடம்பிலுள்ள உயிர்ப்பொருட்களுக்கு அப்படி ஒரு தேவையுள்ளது. அந்த தேவையை எவ்வளவு சீக்கிரம் பூர்த்தி செய்து கொள்கிறோமோ அத்தனை சீக்கிரம் செய்து கொள்வது நல்லது. என்னைப் பொறுத்தவரை இவர் மீது எனக்கு மிகுந்த நம்பிக்கையுள்ளது. ஏனெனில் இவர் அந்தத் தேவையை தீர்த்துக் கொண்டுவிட்டார். இன்னும் அந்த

உன் உந்துதல் தீராதவர்கள் ஏராளமானவர்கள் இருக்கிறார்கள். கேட்கிறேன் என்று கோபம் கொள்ள வேண்டாம். நீர் எப்பொழுதாவது ஒரு ஜெனரல் மீது குண்டு வீசியிருக்கிறீரா ?

தலைவன் : your excellency !

ஜெனரல் : நான் கூட வீசியதில்லை. ஆகையால் இவ்வாறு கூறுவதற்கு மன்னிக்கவும். நான் உம்மீது, என்மீது கொண்டிருக்கும் நம்பிக்கையை விட இவர் மீது அதிக நம்பிக்கை கொண்டுள்ளேன். கர்னல், நீர் ஒரு ஆதர்ச போலீஸ் தலைவராக ஆகவேண்டுமென்றால் நான் என் மீதே குண்டு வீசிக்கொள்வதை தடுத்து நிறுத்தும் நடவடிக்கைகளைப் பற்றி சிந்தனை செய்ய வேண்டும். இதைப்பற்றி எப்பொழுதாவது நினைத்துப் பார்த்திருக்கிறீரா?

தலைவன் : இல்லை ஐயா !

ஜெனரல் ; நினைத்துப் பார்க்க வேண்டும். ஒரு ஜெனரலின் உடல் ஒரு நாட்டு அரசாங்கத்தின் சொத்து. பதவியிலிருக்கும் தனி மனிதனின் சொத்தல்ல. ஆகையால் இதைப் போன்ற முயற்சி—அது என்னுடைய தாகக்கூட இருக்கலாம்—அது ஒரு சீருடைக்கு எதிரான தாக்குதலாக மறைமுகமாக அரசாங்கத்திற்கு எதிரான தாக்குதலாகக் கருதப்பட வேண்டும். இதைப் போன்ற காரியத்தில் நீர் என்னைக் கைது செய்ய நேர்ந்தால் இந்தக் குற்றத்திற்கான தகவலை நானே உங்களிடம் நேரில் சொன்னதாக எடுத்துக் கொள்ள வேண்டும். நான் விசாரணை செய்யப் படும்பொழுது இது ஒரு விநோதமான நிலையாகக் கருதப்படும். இது தான் நிலைமை. (போலீஸ் தலைவர் விறைப்பு நிலைக்கு வருகிறார்). லெப்டினென்ட் பற்றிய விவாதத்திற்கு திரும்பும் நானே சில விஷயங் களைச் சொல்கிறேன். இவர் சமீபத்தில்தான் வேலையில் சேர்ந்தார். நம் நிலைமையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட நிலைமையிலிருந்து இவர் நம்மிடம் வந்துள்ளார் என்பதை நான் சொல்லவேண்டிய தேவை இல்லை. இவர் ஏற்கனவே ஒரு அதிகாரி அந்தஸ்தை அடைந்து விட்டார். இதற்கு முயற்சி வேண்டும் என்பது உமக்கே தெரியும். இவருடைய கடின உழைப்பையும், கருத்தையும் நாம் நிச்சயம் பாராட்ட வேண்டும். கர்னல், நாம் பழைய போலீஸ்காரர்கள். இந்த விசுவாச குணங்களை நாம் சிறிது சிறிதாக சேர்த்திருக்கிறோம். இவருக்குள் நீண்ட காலமாக இருந்த அரசாங்க எதிர்ப்புப் போக்கு திடீரென வெடித்துச் சிதறி புத்தம் புதிதாக மிக சுத்தமான அன்பு—அரசாங்கத்தின் மேல் அன்பு மலர்ந்துள்ளது. இந்த இணையான செயல்பாடுகளில் இவர் யாருக்கும் இளைத்தவர் அல்லர். ஆகவே நீர் இவரைக்கண்டு வெளிப்படுத்தும் வெறுப்பு. நீர் சாட்டும் நியாயமற்ற குற்றச்சாட்டு இவர் பளீரென அடைந்துவிட்ட வெற்றிகளைக் கண்டு நீர் கொண்ட பொறாமை எனக் கூறுவேன்.

தலைவன் : ஐயா, நான் சத்தியமாகக் கூறுகிறேன்.

ஜெனரல் : ஆல்ரைட். கவலை வேண்டாம். நான் இவரை அழைத்து வந்ததே (எழுந்திருக்கிறார்) நம் குழந்தை ராஜா, தேசாதிபதி மாமா வின் எதிரிகள் சம்பந்தப்பட்ட சிக்கலான வழக்கு இருப்பதால்தான். வந்த வேலையைக் கவனிப்போம். ஆரம்பிக்கலாமா ? (அவரவர் தங்கள் இருக் கைகளில் அமர்கின்றனர், விசாரிப்பதற்கு. மேடை நாடகம் துவங்கும் முன் இருக்கும் ஒரு எதிர்பார்ப்பு.) ஆரம்பியுங்கள், லெப்டினெண்ட்.

தலைவன் : நான் கருத்துக்கூற அனுமதியுங்கள்.

ஜெனரல் : என்ன ? நீங்களே மறுபடியும் ! நீங்கள் உங்களை நினைத்து வெட்கப்பட வேண்டும். இளைஞர்களைக் கண்டு உங்களுக்கு ஏற்படும் வெறுப்பு எனக்கொரு சந்தேகத்தை உண்டாக்குகிறது.

தனிப் பாதுகாவலன் : நீங்கள் ஏமாற்றமடையப் போகிறீர்கள் your excellency நீங்களும் போலீஸ் தலைவரும். விஷயம் சிறியதாக சாதா ரணமாக இருக்கப் போகிறது.

தலைவன் : நீங்கள் அவ்விதமாகவா எண்ணுகிறீர்கள் இளைஞரே !

ஜெனரல் : நான் கர்னலின் கருத்தோடு ஒத்துப் போகிறேன். வழக்கின் எளிமையை மிகவும் குறைவாக மதிப்பீடு செய்கிறீர்கள். குற்றம் சாட்டப் பட்டவரின் நம்ப முடியாத சூழ்ச்சி, அளவிறந்த கபடம் இவற்றின் விளை வால் அவருக்கு எதிரான சாட்சியம் நமக்கு எதுவும் கிடைக்கவில்லை. குழந்தை ராஜா, மாமா தேசாதிபதி (எழுந்திருக்கிறார்) இவர்களுக்கு எதிரான பெரும் வெறுப்பில் ஏற்பட்ட கீழ்த்தரமான செயலின் அளவு இவனை நாம் கைது செய்ய முடிந்துள்ளது குற்றவாளி உரத்த குரலில் இரையும்பொழுது இவ்வளவு விஷயங்களைக் கத்த முடியுமென்றால் மௌனமாக இருக்கும்பொழுது எவ்வளவு பயங்கரமான சேதிகளை மன திற்கடியில் போட்டு வைத்திருப்பார். குற்றவாளி என்னென்ன செய்திருப் பார் என்பதை அறிய நாம் அவரிடமிருந்து எதையும் கைப்பற்றவில்லை. அவரிடமிருந்து வெடி மருந்துகள் கிடைக்கவில்லை என்பதை மட்டும் குறிப்பாகச் சொல்வேன். இந்த வழக்கு எளிமையானது. மிகவும் சிறி யது என்று எந்த அடிப்படையில் கருதுகிறீர்கள் ?

தனிப் பாதுகாவலன் : கைதி இழைத்துள்ள விரோதமான செயல்கள் எதனை யும் இக்கணம் குறிப்பிட விரும்பவில்லை. ஆனால் அச்செயல்கள் குற்றம் சாட்டப்பெற்றவரின் ஆளுமையில், அதன் முழு கீழ்மையான தளத்தில் பதுங்கியிருக்கிறது என்றும் அது செயல்படுத்தப்படாவிட்டாலும் செயல் படுத்தப்பட்டு விட்டதென்ற யதார்த்த நிலையில் அக்குணங்கள் அங்கு வாழ்ந்து கொண்டிருக்கின்தன என்று என்னால் திட்டவட்டமாகக் கூற

முடியும். நாம் அறிவோம், அறிவோமா இல்லையா? காலம் என்பது ஒன்றே. கடந்த காலம் நிகழ்காலம் என்று அதைப் பிரிக்கக் கூடுமா? மேலும் புலன் விசாரணை என்ற நோக்கில் அது தெள்ளத் தெளிந்த எழவு உண்மை.

தலைவன் : என்னை அனுமதித்தால், ஜெனரல், இரண்டு வார்த்தைகள்.

ஜெனரல் : தாராளமாக...

தலைவன் : நாம் அதீத பயங்கரமான குற்றவாளியோடுதான் பேச்சு நடத்த வேண்டியுள்ளது. அதில் போலீஸிற்கு எதுவும் வேலை இல்லை என்று சொல்பவர்களை—இவர்களைக் கைது செய்யாவிட்டாலும்—கண்டு இரக்கப்பட வேண்டியுள்ளது. என் தோழர் லெப்டினெண்ட் கையாளும் முறை கவர்ச்சியாக இருந்தாலும் அவர் காட்டும் பரபரப்பு அவருடைய அனுபவமின்மையை பறைசாற்றுகிறது.

ஜெனரல் : கர்னல், நான் உங்களைக் கேட்டது...

தனிப்பாதுகாவலன் : எனக்குத் தெரிந்த வரை குற்றவாளி, இந்த விரோத செயல்பாட்டை, வெகுகாலம் விசுவாசமாக இருந்த பின்புதான் அதுவும் அரசாங்கத்தின் ஒத்துழைப்போடுதான் ஆரம்பித்துள்ளார்.

தலைவன் : அது அவ்வாறுதான்! என் இனிய நண்பரே!

தனிப்பாதுகாவலன் : நாம் பயங்கரமான ஒரு தனிமனிதனோடு பேச்சு நடத்தப் போகிறோம். நாம் கடைப்பிடிக்க வேண்டிய முறை, ஜெனரல் என்னுடைய பணியை மதிப்பிட சற்று நாழிகை முன்பு கருணையுடன் கையாண்ட முறை—அதைக் கையாளவேண்டும். அந்த முறையை 'எதிரிடை இயக்க முறை' எனக் கூறலாம். இந்த மனிதன், வயதான நாளில், தன் அறிவுக் கூர்மைப்படும் காலத்தில் தன்னுடைய முதல் சிற்றின்ப மகிழ்ச்சியை பெருங்குற்ற உணர்ச்சியோடு எய்தினான். இந்தக் குற்ற உணர்ச்சி ஒருவருக்கு அவருடைய தனி முக்கியத்துவம் தன்மதிப்பு போன்ற மாயையான மதிப்புகளை தோற்றுவிக்கின்றது. கடவுள் நம்பிக்கை, விசுவாசம், நடைமுறைப் பார்வைகளில் ஒன்றிப் போதல் இவைகளும் இதைப் போன்றதுதான். ஆகையால் அதை அனுபவிக்காதவர்களுக்கு இந்தக் குற்ற உணர்ச்சி பெருங் கவர்ச்சியாகவே இருக்கிறது.

தலைவன் : இதை நான் ஒத்துக் கொள்ளமாட்டேன். இந்த மனிதன் வெறுக்கத்தக்க வகையைச் சேர்ந்த குற்றவாளி என்பது தெளிவான ஒன்று. ஆனால் மற்ற குற்றவாளிகளைவிட எந்த விதத்தில் மட்டமானவன்... மற்ற.... ஜெனரல்கள் மீது குண்டு வீசும்...மற்ற...

ஜெனரல் : திரும்பவும் அந்த எழவு குண்டைப்பற்றி... (குழப்பம், முணுமுணுப்பு. தலைவர் மீசை வழியே பெருமூச்சு விடுகிறார்.)

ிப்பாதுகாவலன் : நான் உறுதியாகக் கூறமுடியும். இந்த மனிதன் கண் ரப்பையை ஆட்டாமல் மூன்று ஜெனரல் மீது குண்டு வீசக்கூடியவன்.

லவன் : (தன்னிச்சையாக, சார்ஜெண்ட்டிடம் பழைய மேலதிகாரி குரலில்) அட்டென்ஷன்! (சார்ஜெண்ட் தன்னிச்சையாக விறைப்பு நிலை யில் நிற்கிறான்.) இப்பொழுது பேசும். ஜெனரல் மீது உம்மால் ஒரு குண்டை வீச முடியுமா?

ஜனரல் : மனம் திறந்து, உண்மையாக பதில் அளி. சார்ஜெண்ட், எங்கள் யாரையும் பார்க்க வேண்டாம்.

ர்ஜென்ட் : ந... ல்... ல... து ஐயா! என்னிடம் விநோதமான சிந்தனைகள் இருக்கலாம். ஒத்துக்கொள்கிறேன். இந்த ரயில்வே, விவசாயம் இது மாதிரி விஷயங்கள் பற்றி. ஆனால் ஒரு ஜெனரல் மீது குண்டு வீச...

லைவன் : (வெற்றிக் களிப்பில்) கனவான்களே! கண்ணுறுங்கள்!

ளிப்பாதுகாவலன் : (சார்ஜெண்ட்டிடம் வற்புறுத்துகிற மாதிரி) ஞாயிற்றுக் கிழமை மாலை வேளை... காலாற நடந்து சென்றுகொண்டிருக்கிறீர். தற்செயலாக, உம்மிடம் ஒரு வெடிகுண்டு இருக்கிறது. இதை உன் வீட்டி லிருந்து எடுத்துக்கொண்டு வந்திருக்கிறீர். அது ஏன் என்று தெரிய வில்லை. உம்மைச்சுற்றிலும் மனிதர்கள், அழகான பெண்கள். திடீரென்று நீர் ஒரு ஜெனரலைப் பார்க்கிறீர்.

ர்ஜெண்ட் : நிஜமான ஜெனரலையா?

லைவன் : (ஆத்திரத்துடன்) சார்ஜெண்ட் ஒழுங்காக நடப்பீரா?

ளிப்பாதுகாவலன் : சரி, ஜெனரல் உமக்கு எதிராக நடந்து வருகிறார். அவர் அங்கிங்கு திரும்புவதில்லை. நேராக நடந்து வருகிறார். அவர் மெடல்கள் மின்னிக் கொண்டிருக்கின்றன. கால் ஜோடுகள் பளபளத்துக் கொண்டிருக்கின்றன. எல்லாவற்றுக்கும் இப்பொழுது பழி வாங்கிவிடலாம் என நினைக்கிறாய். இத்தனை அழகான ஜெனரல் இனிமேல் இரண்டா வது முறை உன் வழியில் வரமாட்டார் எனத் தோன்றுகிறது.

ார்ஜெண்ட் : தேவடியாப் பயலே!

லைவன் : கடைசி முறை...

ளிப்பாதுகாவலன் : சரி! சரி! (மௌனம்.)

ார்ஜெண்ட் : (தனக்குள் போராடி இறுதியில் சுதந்திரமான ஒரு பெரு மூச்சுடன்) இல்லை! என்னால் முடியாது!

(எல்லோரும் இறுக்கத்திலிருந்து விடுபடுகிறார்கள்.)

லைவன் : ஜெனரல், நீங்கள் திருப்தியடைந்து விட்டீர்கள் என நினைக்கி றேன்.

ஜெனரல் : மனம் விட்டுச் சொல்கிறேன். நீங்கள் ஏன் விசாரணைக்கு குந்தகமாக இருக்கிறீர்கள் என ஆச்சரியப்பட ஆரம்பித்துள்ளேன்.

தலைவன் : நானா? விசாரணைக்கு குந்தகமாக இருக்கிறேனா? நானா?

ஜெனரல் : எனக்கு அப்படித் தெரிகிறது. இந்த மனிதன் மீது குற்றம் ஏதாவது ருசிப்பிக்கப்படா விட்டால் அது ஏன் உமக்கு முக்கியமாக தோன்ற வேண்டும்?

தலைவன் : இதை நான் மறுக்கிறேன்.

ஜெனரல் : குற்றவாளியின் உண்மையான ரூபத்தை வெளிக் கொணர்வதில் அவனுடைய கீழ்மையை உருவியெடுத்து அவனை நிர்வாணமாக்குவதில் மும்முரமாக உள்ள என் உதவியாளருக்கு நீர் ஒரு தடையாக இருக்கிறீர். உம்முடைய நிலைமையை குழந்தை ராஜாவின் மாமா தேசாதிபதியிடம் விளக்கி விவாதிப்பது என் கடமை எனக் கூறி உம்மை எச்சரிக்கிறேன்.

(அவர்கள் எழுந்திருந்து உட்கார்கின்றனர்.)

தலைவன் : இந்த விதமான குறுக்கீட்டால் எனக்கு எந்த விதமான லாபமுமில்லை என்பதை மேன்மைதாங்கிய உங்களுக்கு தெரியப்படுத்துவதற்கு என்னிடம் பல வழிகள் இருக்கின்றன.

ஜெனரல் : என்னைப் பயமுறுத்துகிறீரோ?

தலைவன் : நான் அதைச் செய்ய முற்படக்கூடமாட்டேன். இந்த விஷயத்தை இத்துடன் கை கழுவுகிறேன். விசாரணையின் பலாபலன்களுக்கு நான் பொறுப்பேற்க மாட்டேன்.

ஜெனரல் : மிக்க நன்று! விசாரணை விசாரிப்பிற்கு வருவோம்.

தனிப்பாதுகாவலன் : கைதியை சற்று நேரம் அப்புறம் இருக்கச் செய்ய முடியுமா?

ஜெனரல் : நிச்சயம்! கர்னல்! நீர்...

தலைவன்: (ஒரு மணியை அடிக்கிறான். போலீஸ்காரன் ஒருவன் வருகிறான்) அவரைத் தாழ்வாரத்திற்கு கூட்டிப் போ. மீண்டும் மணியடித்தவுடன் கூட்டி வா.

(போலீஸ்காரன் சார்ஜெண்டை அழைத்துச் செல்கிறான்.)

தனிப்பாதுகாவலன் : குற்றம் சாட்டப்பட்டவன் ஜெனரல் மீது குண்டை வீசியவன் என்ற குற்றமிழைத்துள்ளான் என்று அடிப்படையாகக் கருதுகிறேன். இவன் புத்தி கூர்மை குறைந்தவன், பெரிய கற்பனையில்லாதவன் என்பது சாதாரண பிரச்சினை. ஆனால் என்னிடம் ஒரு திட்டம் இருக்கிறது.

ஜெனரல் : நாங்கள் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறோம்.

ப்பாதுகாவலன் : கர்னலின் சாய்வு மேஜையில் ஒரு—வெடிகுண்டு இருக்கிறது. முன்னொரு காலத்தில் ஜெனரல் மீது விசிய அதே குண்டு. அந்த குண்டு வேலை செய்யாத குண்டு. சாட்சி! அந்த ஜெனரல் நம்மிடம் இருக்கிறார். நாம் ஒன்று செய்யலாம். ஒன்று உறுதியளிக்கிறேன். நாம் சந்தேகப்படும் அந்த மனிதனைக் கூப்பிட்டு அவனிடம் இந்த குண்டைக் கொடுப்போம். கதவைத் திறப்போம். ஜெனரல் வழிநடையில் நிற்கட்டும். இவன் கையில் குண்டுடன் நிற்பான். எதிரே ஜெனரலைப் பார்த்தவுடன் அவனுடைய விடுதலை, அராஜக உணர்வுகள் வெளிக் கிளம்பும். அவற்றை அடக்க முடியாது. அவன் குண்டை வீசுவான். இவ்விதம் அவனுடைய கொடிய எண்ணங்களுககும் குற்றத்திற்கும் தெளிவான நிருபணம்—கிட்டத்தட்ட நிஜமான நிருபணம் கிடைத்துவிடும்.

ரல் : ஆனால் இது பைத்தியக்காரத்தனம். நீர் என்ன நினைக்கிறீர் கர்னல்!

லவன் : ஐயா, உங்க உதவியாளர், உங்கள் ஈடு இணையற்ற உதவியாளர் குறைந்த காலமே பணியாற்றியிருந்தாலும் நம்பிக்கை நட்சத்திரமான உதவியாளர். அவரது இந்த பரிசோதனையை நீங்கள் லேசாக எண்ணி, மறுத்து விசாரணையைத் தடை செய்துவிட வேண்டாம்.

ப்பாதுகாவலன் : மீண்டும் சொல்கிறேன். தீங்கு விளைவிக்க முடியாத குண்டு. சரியாக வெடிக்காது. குறைந்த படசம் இந்த முறை.

ரல் : ஆக. லெப்டினெண்ட், நீங்கள் நினைக்கிறீர்கள்...

ப்பாதுகாவலன் : நான் என் கடமையை ஆற்றுகிறேன். அரசாங்கத்திற்கு எதிரான செயல்பாடுகளை வெளிக்கொணர வழிமுறைகளை சொல்லிக் கொண்டிருக்கிறேன். குழந்தை ராஜா, மாமச தேசாதிபதியின் பணியில் நான் ஒரு அதிகாரி.

ரல் : நீர் மிகவும் துருதுருவென இருக்கிறீர் இளைஞரே!

லவன் : உங்கள் நண்பர் என்ற முறையில் இந்த விசாரணையில் தாமதம் எதையும் ஏற்படுத்த மாட்டேன். ஜெனரல், ரகசியமான ஒன்றைச் சொல்கிறேன். குழந்தை ராஜா மாமா தேசாதிபதிக்கு (எழுந்து உட்கார்கின்றனர்) நேரடியாக அனுப்பப்போகிற அறிக்கையை போலீஸ் சேவையில் உங்கள் கவனத்தைக் குறிப்பாக குழந்தை ராஜா மாமா தேசாதிபதியின் (எழுந்து உட்கார்கின்றனர்) எதிரிகளை களைவதில் உங்களுக்கு உள்ள ஆர்வத்தைக் குறிப்பிடுவேன்.

ரல் : (ஏமாற்றமடைந்து) வெடிகுண்டைக் காட்டும். சற்று நான் சிந்திக்க வேண்டும். (தலைவன் மேஜையருகே சென்று அதைக்கொண்டு வந்து ஜெனரலிடம் ஒப்படைக்கிறான். அதை அவர் தனிப்பாதுகாவலனிடம் ஒப்படைக்கிறார். அதை அவன் தலைவனிடம் கொடுக்கிறான்)

தனிப்பாதுகாவலன் : ஆமாம், அதே குண்டுதான் இது !

ஜெனரல் : நிச்சயமாக ?

தனிப்பாதுகாவலன் : சர்வ நிச்சயமாக !

தலைவன் : சரி. ஜெனரல் நீங்கள் சம்மதிக்கிறீர்களா ?

ஜெனரல் : நான் ஒத்துழைக்கவில்லை என்று சொல்ல முற்படுகிறீர்களா கைதியிடம் இத்த நிலையை விளக்குங்கள். (தலைவன் மணியை அடி கிறான், போலீஸ்காரன் சார்ஜெண்ட்டைக் கொண்டு வருகிறான்)

தலைவன் : நீ செல்லலாம் கான்ஸ்டபிள் (போலீஸ்காரன் போகிறான்) நீ ஜெனரல்மீது குண்டை வீசப் போகிறீர்.

சார்ஜெண்ட் : என்ன? சும்மா இப்படித்தானே ?

தலைவன் : ஜெனரல் வழிநடையில் நிற்பார். நீர் அங்கு இருப்பீர்.

ஜெனரல் : நாளைவரை நாம் இதை ஒத்திப்போட முடியாதா ?

தலைவன் : உங்கள் விருப்பப்படி ஜெனரல்... இந்த விஷயத்தில் அரசா கத்தின் கருத்தைக் கேட்டுப் பார்க்கலாமா ?

ஜெனரல் : ஓ... வேண்டாம் ... வேண்டாம் ... நான் போகிறேன் ! (தான் வெளியே செல்வதற்கு கதவைச் சாத்துகிறார். சார்ஜெண்ட் நிற்க வேண் டிய இடத்தைக் குறிக்கிறான் தலைவன். எப்படி குண்டை வீச வேண்டும் என்று விளக்கி தலைவன் சார்ஜெண்டிடம் குண்டைக் கொடுக்கிறான். நிலைமையின் அபத்தம் பெருகிக்கொண்டே போகிறது)

தனிப்பாதுகாவலன் : ஒரு நிமிஷம் ஜெனரல்.

ஜெனரல் : (கதவைச் சிறிதாகத் திறந்துகொண்டு) என்ன ?

தனிப்பாதுகாவலன் : தயவு செய்து கதவைத் திறந்து வையுங்கள். இல்லா விட்டால் அவன் உங்கள் மேல் குண்டை வீச முடியாது.

ஜெனரல் : சரி... சரி... (கதவைத் திறந்து வைக்கிறான்)

தபானிப்துகாவலன் , என்னுடைய முகக் கவசத்தை அவனிடம் கொடுங்கள். அது மேஜையில் குண்டோடு இருந்திருக்க வேண்டுமே ! பாவனை முழுமை யாக இருக்க வேண்டுமே ! (சார்ஜெண்டிடம் முகக் கவசத்தைக் கொடுக் கிறான்)

தலைவன் : (திரும்பிவந்து) ரெடியா ? ரைட் ... லெப்டினெண்ட்... நீர் தொடர லாம்.

தனிப்பாதுகாவலன் : ஓ.கே... இப்பொழுது நீர் தனியாக உலாத்திக் கொண் டிருக்கிறீர். அங்கே அழகான பெண்கள் ! அங்கே கர்னல் நின்று கொண்டிருக்கிறார். சூரியன் தகதகத்துக் கொண்டிருக்கிறது. அங்கே

(தாழ்வாரத்தைச் சுட்டிக்காட்டி) ஜெனரல் இருக்கிறார். அவருடைய மெடல்கள் மின்னிக் கொண்டிருக்கின்றன. ஜோடுகள் பளபளத்துக் கொண்டிருக்கின்றன. எல்லாவற்றையும் திருப்பியடித்து பழி வாங்க வேண்டும் என்று உங்களுக்குள் நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஜெனரலைப் பாருங்கள்! (சார்ஜெண்ட் குண்டை வீசுகிறான். ஒரு விநாடி விளக்குகள் அணைகின்றன. ஒளிவெள்ளம். வெடியோசை. ஒரு கணம் இருட்டு. பிறகு வழக்கமான விளக்குகள். தலைவரும் தனிப் பாதுகாவலரும் ஒருவரை ஒருவர் நோக்கியவண்ணம் அமைதியாக நிற்கின்றனர்)

தலைவன் : உனக்கு ஜெனரலை மிகவும் பிடிக்கும் என நினைக்கிறேன். உன்னுடைய மேலதிகாரி என்ற முறையில் உன்னை மிக மரியாதையாக நடத்தி வந்தார்.

த. பாதுகாவலன் : அவர் உன்னை நடத்திய விதத்திற்கு நேரெதிரான விதத்தில். வருஷா வருஷங்களாக நீங்களே போலீஸ் தலைவராக இருப்பதை அவர் பொருட்படுத்தவேயில்லை.

தலைவன் : உம்மை நான் கைது செய்யப் போகிறேன் என்றால் நீர் என்ன செய்வீர்? சின்னஞ் சிறிய இந்தக் குண்டு விஷயம் மிகவும் சந்தேகமான விஷயம்.

த. பாதுகாவலன் : ஆமாம், உடன்படுகிறேன். சந்தேகமானதுதான். உங்கள் பங்கு தெளிவே இல்லாதது. இருவரும் ஒருவருக்கொருவரை கைது செய்துகொள்ள வேண்டிய விநோதமான நிலைமை.

தலைவன் : இளைஞனே, உம்மால் எவ்வளவு தூரந்தான் போக முடியும். ஆனால் நீர் நினைக்கும் அவ்வளவு தூரம் அல்ல. அதுவும் என் பதவியை நோக்கியா...? நான் போலீஸ் தலைவன், நீர் என் கீழ்திசையில் போகும் போலீஸ்காரன். நான் உன்னைக் கைது செய்கிறேன். (வாளை உருவி, பாதுகாவலனைக் கைது செய்கிறான்)

த. பாதுகாவலன் : மிக்க நன்று. நீங்கள் இப்படி நடப்பதால் உம்முடைய பதவிக்கு வெகு சீக்கிரமான முடிவைத் தேடிக்கொண்டு விட்டீர். நான் குண்டு வீச ஏற்பாடு செய்தவன் என்ற உம் குற்றச்சாட்டு வெறும் நகைப்புக்கிடமான முயற்சியாகப் போகப் போகிறது.

தலைவன் : அது ஏன் அப்படி நண்பா?

த. பாதுகாவலன் : மிகவும் சுலபம், கிழவா! நீர் என் மேல் அரசாங்கத்தை எதிர்த்து கொலை செய்ய முயன்ற குற்றங்களைச் சாட்டுவீர். இந்தக் கைதி கையெழுத்திட்டுவிட்டு மன்னிப்பு வாங்கிக்கொண்டு போனபோது நீங்கள்

எங்கிருந்தீர்கள் என்று கேட்கப் போகிறார்கள்? கையாலாகாத ஒரு கைதி கூட கண்ணில் மிளகாய்ப்பொடி வீசும் அளவுக்கு நீர் என்ன பெரிய போலீஸ் தலைவர்? இந்தச் சின்னஞ்சிறு விளையாட்டைக்கூடப் புரிந்து கொள்ள முடியாத நீர், என்னை விடுதலை செய்த நீர், என்ன பாது காப்பு அதிகாரி? என்னை மன்னித்து விடுதலை செய்தீர்கள். நான் விசுவாசமாக அரசுப் பணியில் சேர்ந்தேன். இதற்கெல்லாம் பிறகு நீங்கள் என்மேல் எப்படிக் குற்றம் சாட்ட முடியும்? கொலை செய்ய முயன்ற குற்றத்தை நீர் என்மேல் சுமத்த உங்கள் நிலைமை கேலிக்கிடமாக அல்லவா போகும். சரி, ஒரு விஷயம். நான் உங்களைக் கைது செய்தால் நீங்கள் என்ன பதிலிறுப்பீர்?

தலைவன் : போலீஸ் கைதுக்கு அப்பாற்பட்டவன் என நினைக்க வேண்டாம். எல்லாவற்றிற்கும் மேலாக, கைது நம் தலைமேல் நிற்கிறது. நான் நெடு நாள் பணியாற்றிவிட்ட போலீஸ்காரன். நீர் என் மேல் வழக்கு தொடுக்க நினைத்தால் ...

த. பாதுகாவலன் : என்னால் முடியும்! இந்த நிலைமையை நான் இப்படிப் பார்க்கிறேன். போலீஸ் தலைவர்களின் முக்கிய கடமை ஜெனரல்களை குண்டுவீச்சிலிருந்து பாதுகாப்பது. நீங்கள் என்ன செய்தீர்கள்? நீங்கள் கைதான புரட்சியாளன் கைகளில் குண்டைத் திணித்தீர்கள். எப்படி வீச வேண்டும் என்று சொல்லியும் கொடுத்தீர்கள். மிகப் பயங்கரமான விஷயம்!

தலைவன் : உமக்கு என்ன பைத்தியமா? இந்த எல்லா விஷயங்களுமே உம்முடைய ஆலோசனைகள்!

த. பாதுகாவலன் : அந்த ஆலோசனைகளை சந்தேகத்தைக் கிளறும் அதீத ஆவலோடு நீங்கள் கடைப்பிடித்தீர்கள்.

தலைவன் : அதுவும் உம் நிர்பந்தத்தினால்தான். நீர்தான் இதை செய்யச் சொன்னீர். குண்டோடு செய்த விஷப்பரிட்சையில் நீர்தான் நிறைய கவனம் செலுத்தினீர்

த. பாதுகாவலன் : ஆனால் நான் போலீஸ் தலைவர் அல்லவே. திரும்பத் திரும்பச் சொல்கிறேன் போலீஸ் தலைவனின் முதலாவது கடமைஎன்ன? ஒரு முட்டாள்கூடச் சொல்வான். ஜெனரல்களை குண்டு தாக்குதலிலிருந்து பாதுகாப்பது.

தலைவன் : குண்டு வெடித்திருக்க கூடாதே! நீர்தான் அது பயனற்றது என்று என்னிடம் சொன்னீரே...

. பாதுகாவலன் : எனக்கும் இதற்கும் சம்பந்தமில்லை. நீர் என்னை நம்ப வேண்டும் என்ற சட்டமில்லை.

லைவன் : சற்றுமுன்னால் நீர்தான் உண்மையைப் பேசுவதாகவும் அரசாங் காத்துக்கு விசுவாசி என்றும் உறுதி அளித்தீர்.

. பாதுகாவலன் : அதுசரி. நான் அரசாங்கத்தின் விசுவாசி. நீங்கள் போலீஸ் தலைவர் என்ற முறையில் சரியென்று பொருள்கொள்வதெல்லாம் வேறு விதமாகவும் இருக்கலாம் என்று யோசித்துப்பார்த்திருக்கலாம். சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப இதற்கு எதிரான அர்த்தம் இருக்கும். இருக்க லாம். இவ்வளவு வருடங்கள் பணியாற்றியும் இந்தப்புராதன விவாதங் கள்கூட உங்களுக்குப் புரியவில்லை.

லைவன்: (விடுபட்ட உணர்வுடன்) மிகவும் சரி. நிலைமை தெளிவடையும் வரை நாம் ஒருவர்க்கொருவர் கைதியாக இருப்போம் (தனி பாதுகாவலன் வாளை உருவி போலீஸ்தலைவனை கைது செய்கிறான். ஜெனரல் நுழை கிறார்)

லைவன் : ஜெனரல் ! நீங்கள் உயிரோடு இருக்கிறீர்களா?

ஜெனரல் : நான் ஒன்றும் முழுமுட்டாள் அல்ல. நான் போய் கக்கூசில் ஒளிந்து கொண்டிருந்தேன்.

. பாதுகாவலன் : சிறிது நேரம் முன்பு தலைவர் எகிறிய எகிறல் மிகவும் அதிகம். ''ஜெனரல் உயிரோடு இருக்கிறீர்களா'' என்ற தலைவரின் கேள்வியில் உள்ள ஆச்சரியம் எதையோ எதிர்பார்த்திருக்கிறார் என்பதை புலப்படுத்துகிறது.

ஜெனரல்: உங்கள் இருவரையும் கைதுசெய்ய வேண்டிவருமென எண்ணு கிறேன். இதில் இரண்டு சாத்தியங்கள் இருக்கின்றன. தற்செயலாக நடந்தது. இல்லாவிட்டால் மூவரில் ஒருவர் வெடிமருந்து இயக்கியை நன்றாகமுறுக்கி வைத்திருக்கிறீர்கள். துரதிர்ஷ்டவசமாக விபத்தை கைது செய்ய நம்மால் முடிவதில்லை. ஆகவே இரண்டாவது சாத்தியம் மட்டும் இயலும் கைதியைப் பற்றி கவலை இல்லை. அவன் ஏற்கனவே கைதி. ஆகவே, கனவான்களே நீங்கள் இருவர் மட்டுமே எஞ்சியுள்ளீர்கள்.

லைவன் : சுருக்கமாக, லெப்டினெண்ட்டின் கடந்தகால பணிக்கால ஏடுகள் விசாரணைக் கமிஷனுக்கு விடைசொல்லும்.

. பாதுகாவலன் : சந்தேகமின்றி விசாரணைக் கோர்ட்டின் அங்கத்தினர்கள் போலீஸ் தலைவரின் உள்நோக்கங்களை உதாரணங்களாக கருத்தில் கொள்வார்கள். சந்திக்க வேண்டிய உண்மையான, மோசமான குற்றச்

சாட்டுகளை ஒரு ஓரத்தில் போட்டுவிட்டு ஜெனரலின் உதவியாளனோடு அவர் ஒத்துப்போக வருகிறார் என நம்புகிறேன். புரிகிறது உங்கள் விருப்பம். ஆனால் இது தனிப்பட்ட மனதில் விளைந்த விருப்பம். ஆனால் இந்த விருப்பத்திற்கும் அரசாங்க சேவைக்கும்கிஞ்சித்தும்கூடசம்பந்தமில்லையே!

தலைவன்: அரசாங்கத்தின் பெயரால் உங்களைக் கைது செய்கிறேன் ஜெனரல்! இதை நான் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஜெனரல் : என்னையா? எதற்காக?

தலைவன் : பொறுப்பற்றுப் போய் ஒரு ஜெனரலின் சீருடைகளை குண்டின் தாக்குதலுக்கு விட்டுவிட்டதற்கு கீழ்த்தரமான நடத்தையில் ஈடுட்டீர்கள் என்ற சந்தேகத்தின் அடிப்படையில். என் கடமை உணர்வைத் தூண்டியவர்களே நீங்கள்தான். இந்தக் கருத்து விசாரணையின் போது உங்களுக்கு உதவியாக எடுத்துக் கொள்ளப்படும்

த. பாதுகாவலன்: இந்தப் போலீஸ் தலைவர் ஏற்கனவே ஒருவரால் கைது செய்யப்பட்ட போலீஸ்காரர். அந்த ஒருவராலேயே தானும் கைது செய்யப்பட்டுக்கிடப்பவர். இவர் மூன்றாவது நபரை கைது செய்ய முடியுமா? அதுவும் அந்த மூன்றாவது நபர் இந்த இருநபர்களையும் சற்று முன்னால் தான் கைது செய்துள்ளார் என்ற நிலையில்

தலைவன் : கைது செய்யப்பட்ட ஆசாமிகள் தங்கள் கருத்தைச் சொல்ல அனுமதியில்லை.

த. பாதுகாவலன் : உமக்கும் அதே விஷயந்தான் கர்னல்.

ஜெனரல் : கனவான்களே! போலீஸ்காரர்களுக்கு இப்பொழுது ஏகப்பட்ட வேலை இருக்கிறது எனத் தெரிகிறது.

(சார்ஜெண்ட் விநயமாக மற்றவர்களிடமிருந்து விலகி நின்று கொண்டிருக்கிறான். இப்பொழுது அவன் உரத்த குரலில், கையை உயர்த்தி கத்துகிறான். அவனது உள்ளே உள்ள கலக்கக்காரன் முழுவடிவத்தை எய்துவிட்டான்)

சார்ஜெண்ட் : சுதந்திரம் வாழ்க!

ின்றைய சமூக வாழ்வில் விழாக்களிடமிருந்து எந்த ஒரு தனிநபரும் தப்ப டிவதில்லை. விலகிக் கொள்ளலாம் என்ற போதும் கூச்சல்களும், மேள த்தங்களும் விரட்டுகின்றன எல்லா பக்கங்களிலும். விழாக்களின் காலம் ம்முடையது; கலாச்சார அடையாளம் போல. சமீபமாக மதுரையில் டைபெற்ற நாடகவிழா நவீன நாடக, கலை விழாவாக மதுரை நிஜநாடக யக்கத்தினரால் நடத்தப்பட்டது. 12 நாடகங்கள் நிகழ்த்தப்பட்டன. ஒவ் வாரு நாடகம் பற்றிய தனி அபிப்ராயங்கள் மாற்றம் எதையும் தோற்றுவித்து டும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. இந்த நாடக விழாவில் கவனிக்கப்பட்ட, ல்லது கலகமான இரண்டு விஷயங்களை பட்டுமே முன் நிறுத்தி வனிக்கலாம்.

மிழகமெங்கும் பரபரப்பான 'இரண்டாவது ஆட்டம்' என்ற பாதிநிகழ்த்தப் ட்ட நாடகம் இந்த விழாவில் மிக முக்கியமான இடத்தை எடுத்துக் கொண்டு ட்டது. நவீன நாடங்கள் என்ற பெயரில் புராதன வடிவங்களின்கூறுகளோடு வளியான நாடகங்கள் (சதிபர்வம், ஒற்றையானை, தீனிப்போர், சிற்பியின் ரகம்) இதுவன்றி 'கருஞ்சுழி', அனந்த கிருஷ்ணனின் 'கடல் போக்கிகள்' ண்ணேஸ்வரனின் 'முறைப் பெண்' ஐந்துகோவிலானின் 'அச்சாணி' கழ்த்தப்பட்டன. தமிழ் நாடகங்கள் என்றில்லை, இந்திய நாடகங்கள் லவற்றிலும் பாரம்பரிய வடிவம் பயன்படுத்தபடுவதே நவீனம் என்றபோக்கு ருந்து வருகிறது. பழங்கதைகளுக்கு புதிய விளக்கம் கொடுப்பதோ, புதிய தையில் பழைய வடிவத்தை உபயோகப்படுத்துவதோ நாடக இயக்கம் எங்கும் டந்து வரும் பிரதானமான செயலே ஆகும். பாரம்பரிய கலை வடிவம் வ்வொன்றும் ஒரு சமூக. இன மக்களின் வாழ்க்கையோடு, அவர்களின் லைபாட்டோடு தொடர்புடைய வடிவமாகவே வெளியாகி உள்ளது.

ாரம்பரிய கலைகளை. வெறும் "வடிவம்" என்ற அளவில் புரிந்து காள்ளும் போக்குதான் தமிழ் சூழலில் பரவலாகி வருகிறது. இந்த டிவங்கள் எந்தக் கதையை தேர்ந்தெடுத்துள்ளன, இதன் காரணம் தோடு தொடர்புடையது என்ற விஷயங்களை நீக்கி, வெறும் டிவமாக அதைப் பார்க்க இயலாது. கர்ண மோட்ச கூத்தில் கர்ணன் தீய அடையாளத்துடன் பொருத்துகிறான். பிரகலாதன் கூத்தாடுபவர்களின் ாரம்பரிய கடவுள் பெருமாள் அல்ல. அவர்கள் தங்கள் அடையாளத்தை ழந்து வேறு ஒரு அடையாளத்தை முன் வைத்தே கூத்தை நிகழ்த்து ன்றார்கள். (உ.ம். நார்தேவன் குடிகாடு கூத்து) நவீனம் என்ற விஷயம்

வரையறுக்க முடியாத ஒன்று என்ற போதும், நவீனம் என்பது பல்வேறு போக்குகள் (diversity) என்ற அடிப்படை சாராம்சத்திலேயிருந்தே எழுகின்றது நவீன நாடகங்கள் பாரம்பரிய கலையை உபயோகப்படுத்துவது தவறல்ல அதை ஒரு பாட்டு காட்சி போலவோ, தப்பு அடித்து தொடங்குவதன் மூலமே நவீனமாக்கிவிட முடியாது.

பாரம்பரிய வடிவங்களின் சிதைவு என்பது வெறும் கலை வெளிப்பாட்டின் சிதைவல்ல. சமூக மாற்றங்களோடு சம்பந்தமுடையது. ஒரு புராதன வடிவத்தை புரிந்து கொள்ள, அதன் நுட்பம் தெரிய ஒரு மனிதனுக்கு தன் வாழ் நாள் முழுவதையும் அதன் ஊடாக செலவழிப்பது அவசியம். மேலும் பாரம்பரிய கலை, கலைஞர் இருவரும் வாழ்விலிருந்து பிறக்கின்றார்கள். கூத்தை நிகழ்த்துபவர்கள் மக்களின் ஊடே இருக்கிறார்கள். அவர்களின் மாற்றத்தை உடனடியாக உணர்ந்து கொள்ளுகிறார்கள். மக்கள் கூடும் விழாவில் அவர் களின் நிகழ்ச்சி நடக்கிறது. நவீன நாடகங்களில் நடிகர்கள் சமூக வாழ்விலி ருந்து அப்பாற்பட்டவர்கள், அவர்கள் நிகழ்த்தும் இடமும், நிகழ்த்தும் முறை யும் எல்லோரிடமிருந்தும் விலகியவை. கூத்தை இவர்கள் உபயோகபடுத்தி னாலும் இந்த அந்நியமான நிலை போக மறுக்கின்றது.

அழிந்து வரும் கிராமியக் கலைகள், இன்று பல்வேறு விதங்களிலும் தவறாக முன்னிறுத்தப்படுகின்றன. டி.வி.யில் வரும் கிராமிய பாடல்களும், புதிய தன்னானே பாடல்களும், கறுப்பு மலர்கள், குயில்கள் பாடல்களும் இந்த வடிவத்தைச் சிதைக்கவே செய்கின்றன. கேரளாவில் 'மாப்ளா' பாட்டில் பீடி விளம்பரம் செய்கிறார்கள். இதற்கெல்லாம் பெயர் நவீனம் என்றால், தமிழ் நாடகங்களிலும் இந்த நவீனமே உள்ளது. நாம் பாரம்பரிய நாடகம், மரபு என்று பேசும்போதெல்லாம், அந்த வடிவத்தை மட்டுமே பேசுகிறோம். இன்றைய நவீன நாடகக்காரர் ஒவ்வொருவரும் 'வெளியீட்டு வடிவம்' பற்றிய பிரச்சனைகளிலேயே உழல வேண்டியுள்ளது. பாரம்பரிய கலை வடிவங்களின் ஆவி நாடகக்காரர்களைச் சுற்றி வந்து கொண்டேயிருக்கிறது. இதற்காக சாக்கியர் கூத்தை தமிழில் நாடகமாக்கி ஆடுவதோ, செண்டை அடித்தபடி நாடகம் தொடங்குவதோ, பாரம்பரியமாகிவிடாது.

---

ப்ரக்டின் அந்நியப்படுத்துதல் டெக்னிக் என்ற பெயரில் வேல் குத்தி சட்டி எடுப்பது, மாரியம்மன் தீமிதி, காவடி அறுவா வீச்சு ஆட்டம், குதியாட்டங்கள் நடைபெறுகிறன்றன. ப்ரக்டை தவறாக புரிந்து கொண்டதோடு, மரபையும் தவறாக புரிந்து கொண்டதன் விளைவே இது. கூத்து பல்வேறு அர்த்தங்கள் கொண்டு இயங்குகின்றது. (கோயில், விழா, மதம், சமூகநிலை, இனக்குழு வின் பிரச்சனை, தனிநபர் வெளிப்பாடு ... இப்படியாக) சீதையின் மறுபக்கம், அர்ச்சுனின் அந்தரங்கம், குந்தியின் முதல் இரவு என பழைய கதையின் புதிய

அணுகுமுறைகள் பற்றிய நவீன நாடகங்கள் சவக்குழிக்கு வைக்கும் பழம் கப்பி ண்டிகளேயாகும். மரபை உபயோகப்படுத்தி நடத்தப்படும் நவீன நாடகம் ந்தத் தளத்தில் இயங்குகின்றது, இதற்கு என்ன சூழல் அக்கறை உள்ளது ன்பது தெரியவில்லை. டொங்கரா கொட்டுகள், குதியாட்டம், அருள்வந்து ஆடுவது எல்லாம் நவீன நாடக அந்தர்பல்டி அன்றி வேறு துமில்லை.

'இரண்டாவது ஆட்டம்' பற்றிய பரபரப்பு, மலையாளப்பட ஆபாசபிட் போடும் தியேட்டருக்குமுன் சிலர் போராடி, மலையாளப்பட பிட்டை நிறுத்துங்கள் என ண்டையிட்டு, நிறுத்தப்பட்டதற்கு சமமானதே. ஆபாசம் எது என்ற விவாதத்தை விடுத்தால், இந்நாடகம் நிகழ்த்தப்பட்ட விதத்திலும். நிறுத்தப் பட்ட விதத்திலும் எவருக்கும் ஒப்புதல் இல்லை. 'இரண்டாவது ஆட்டம், அதன் கருத்தை வெளிப்படுத்தக் கூடிய வடிவத்தை தேர்ந்தெடுக்கவில்லை. நிகழ்த்தப்பட்ட விதத்தில் இது தமிழ்ப்படத்தை ஞாபகமூட்டக் கூடிய ஒன்று தான். நிறுத்தப்பட்டதும் தமிழ் சினிமாத்தனமே. ஜெனேயின் நாடகங்களில் வரும் பாலியல் பிரச்சனைகளோ, கோதாரின் படங்களில் வரும் நிர்வாண காட்சிகளோ, ரெனோரின் 'குளிக்கும் பெண்' ஓவியமோ எந்தவித பாலியல் கிளர்ச்சிகளையும் ஏற்படுத்துவதில்லை. இவற்றில் பாலியல் பற்றிய பிரச்சினைகள்' பார்வைகள் கலாப்பூர்வமாக வெளியாகி உள்ளன. அவற்றோடு இந்த நாடகத்தை இணைத்தே நாம் பேச இயலாது. எதிர் கலாச்சார குரலாயிருந்தாலும் அது அதற்கான சரியான வடிவம், வெளியூட்டு முறை மூலமே வெளிப்பட வேண்டிய அவசியம் உள்ளது.

பொது இடங்களிலும் நடைபெறும் ராமாயண சொற்பொழிவுகள், வாலி குற்றவாளியா பட்டிமன்றம், வள்ளுவர் திருவல்லிகேணியில் குடியிருந்தாரா இல்லையா என்னும் வழக்காடு மன்றங்கள், தமிழ் சினிமா பாட்டில் வரும் உடுக்கு சப்தம் போன்றவை தமிழ்ச் சூழலில் எதைச் செய்கின்றதோ, அதைத்தான் பராம்பரிய வடிவம் உபயோகப்படுத்தி செய்யும் நவீனக் கூத்து நாடகங்களும் செய்கின்றன.

கூச்சல், எதிர்க்கூச்சல் தவிர்த்து பார்த்தால் பேசப்படக்கூடிய விஷயங்கள் தமிழில் மிகக் குறைவாகவே பேசப்பட்டுள்ளன என்பதே தெரிய வருகின்றது.

☐

## பொருளடக்கம்


1. நாடக அரங்கம் ஒரு நோக்கு —குழந்தை ம. சண்முகலிங்

2. அறிமுகம் (நாடகம்) —லக்ஷ்மி நாராயணல

3. சாட்சியின்மையைத் தோண்டியெடுத்தல் (நாடகம்) —நிஜந்

4. புதுவையில் முகமூடி மற்றும் ஒப்பனை பயிற்சி முகாம் —விஜயசா

5. நாடக விமர்சனங்கள்

6. பலிபீடம்-வரலாற்றை நோக்கிய தேடல் —வ. [illegible]

7. சைபீரிய நாரைகள் இனி இங்கு வரப்போவதில்லை.—ந. முத்துசா


அட்டையில் : பாண்டி நாடகப்பள்ளி நிகழ்த்திய
மிருகம் நாடகத்தில் வரும் காட்சி.